# டீம் சோற்றுக் கற்றாழை ஜூஸ்

இயற்கை நமக்கு அளித்த விலை மதிக்க முடியாத கொடை சோற்றுக் கற்றாழை என்னும் மூலிகை. மருத்துவ குணங்கள் கொண்ட இந்த மூலிகையில் அமினோ அமிலங்கள், வைட்டமின்கள், கனிமங்கள், அத்யாவசிய எண்ணெய்கள், உயிர்வினை ஊக்கிகள் உள்ளிட்ட உடலுக்குத் தேவையான நோய் எதிர்ப்பு சக்திகள் அனைத்தும் உள்ளன.




**Team Health Shoppe**
For Wellness

ALOE VERA




Team EUBIO CARE

## Team Eubio Care
(Division Of Chemfab Alkalis Limited)

**Vandalur Team House**
- GST Rd. Chennai - 48. Ph: 2275 0502

**Anna Nagar**
Plot 1200, Z Block, 6th Ave. Chennai - 40,
(Opp. Kokino Karate School) Ph: 4269 3332

**Adyar Shop**
No.26, Gr. Flr. Cor., Shopping Complex,
IIIrd Ave. Indira Ngr, Ch- 20. Ph: 4269 5115




E-mail: teamhealthshoppe@drraoholdings.com • www.teamhealthshoppe.com




# கல்கி

11.2.2007



கலைஞர் கற்றுக் கொண்ட பாடம்! 72



சென்னையில் அம்மா! 79



அலர்ஜி அலர்ட்! 26



வாழ்க்கைக்கு இரு கருவிகள்! 56



யாரோடு எனக்குக் காதல்... 40

கடந்த வருடம் புக்கர் பரிசு பெற்ற எழுத்தாளரான கிரன் தேசாய், அண்மையில் சென்னைக்கு வந்திருந்தார். இரண்டு நிகழ்ச்சிகளில் தமது புத்தகத்தின் பகுதிகளை வாசித்தார். வாசகர்களின் கேள்விகளுக்குப் பதிலளித்தார். ''நான் இதற்கு முன்பு சென்னைக்கு வந்தது இல்லை. என் எழுத்தும், அதற்குக் கிடைத்துள்ள பரிசும் என்னை இப்படிப் பல புதிய இடங்களுக்கு அழைத்துச் செல்கின்றன'' என்றார். அவருடன் பேசியதிலிருந்து...

**உங்கள் அம்மா அனிதா தேசாயும் ஒரு புகழ்பெற்ற எழுத்தாளர் என்பது தான் உங்களை எழுதத் தூண்டியதா?**

"ஆமாம். அதே சமயம் என் அம்மா, 'நீ எழுத்தின்பால் ஈர்க்கப்பட்டு விட்டாய் என்றால், எவ்வளவு பிரச்னைகள் என்றாலும் உன்னால் எழுதுவதை நிறுத்த முடியாது' என்றார். முதலில் 'ஹேர் ஆயில்' என்று ஒரு கதை எழுதினேன். அதன்பின் இன்னொரு கதை. தலைப்பு : 'கழிப்பறையும் அரசு அதிகாரியும்'. அவ்வளவுதான்... எழுத்து என்னைப் பிடித்துக்கொண்டு விட்டது. சிறுகதைகளைத் தொடர்ந்து முதல் நாவலை எழுதினேன். அது முழுக்க இந்தியப் பின்னணியில் எழுதப்பட்ட ஒன்று. அதை எழுத எனக்கு ஏழு வருடங்கள் ஆயின. அப்புறம் அதனைப் பிரசுரம் செய்ய பதிப்பகங்களை அணுகியபோது முதலில் யாரும் கண்டுகொள்ளவே இல்லை; மிகவும் சிரமப்பட்டு முதல் புத்தகம் வெளியானது."

**நீங்கள் எழுத ஆரம்பித்த பிறகு, உங்கள் அம்மா, உங்கள் எழுத்துக்கு எந்த அளவுக்கு உதவியாக இருந்தார்?**

"சிறு வயதிலிருந்தே புத்தகம் படிக்கும்

# ''எழுத்தென்பது



ஆர்வம் ஏற்பட்டதற்குக் காரணமே அவர்தான். நான் அவருடன் விவாதித்த பல்வேறு விஷயங்கள், நான் எழுதும்போது எனக்கு உதவியாக இருந்தன. எனவே, என் புத்தகத்துக்கு விருது கிடைத்ததில் என்னைவிட அவருக்கு ஏக மகிழ்ச்சி."

**எழுதுவதற்கென்று உங்களுக்குக் குறிப்பிட்ட இடம், சூழ்நிலை அவசியமா?**

"அப்படி ஒன்றும்

கிரன் தேசாய்

கட்டாயமில்லை. ஆனாலும் எனக்கு டெல்லியில் எழுதுவதற்குப் பிடிக்கும். ஜன்னலுக்குப் பக்கத்தில் அமர்ந்துகொண்டு, வெளியில் இயற்கையைப் பார்த்து ரசித்தபடியே எழுதி இருக்கிறேன். காலை, மாலை இரண்டு வேளைகளிலும் எழுதுவேன் என்றாலும், காலையில் எழுதுகிறபோது கற்பனையும், நடையும் பொங்குவதை உணர்ந்திருக்கிறேன். என் இரண்டாவது புத்தகத்தை எழுதி முடித்த பிறகு, தலைப்பு என்ன வைப்பது என்று பல நாட்கள் யோசித்திருக்கிறேன். கடைசியில் 'தி இன்ஹெரிடன்ஸ் ஆஃப் லாஸ்' என்று தலைப்பிட்டேன்."

**இந்தியாவில் பிறந்த உங்களுக்கு இந்திய மொழிகளில் எழுதவில்லையே என்ற ஏக்கம் உள்ளதா?**

"நான் பள்ளிக்கூடத்தில் கற்ற முதல் மொழி இந்திதான். ஆனால், அதன் பிறகு ஆங்கிலம் படித்ததால், அது எனக்கு எளிதாகிவிட்டது. கஜல் இசையினைக் கேட்டு ரசிக்க முடிகிறது. ஆனால் அதன் வரிகளுக்குப் பொருள் தெரியவில்லையே என்று வருத்தப்படுகிறேன். ஓர் ஆசிரியரை வைத்து இந்தி கற்றுக்கொள்ள வேண்டும்

வேலையல்ல!"

என்ற ஆசை இருக்கிறது."

**உங்கள் எழுத்தின் நோக்கம் என்ன?**

"எழுதுவதை நான் ஒரு வேலையாக நினைக்கவில்லை. அது என் வாழ்க்கையின் ஒரு பகுதி என்று எண்ணுகிறேன். எழுதுவது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது."

**உங்களுடைய அடுத்த புத்தகம்?**

"அது மட்டும் எனக்குத் தெரிந்துவிட்டால் நான் நிம்மதியாகத் தூங்குவேனே! *(சிரிக்கிறார்)* அடுத்த புத்தகம் எழுத வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. அவ்வளவுதான். இப்போதைக்கு இதைத்தான் சொல்ல முடியும். மிகக் குறைந்த காலத்தில் திட்டமிட்டு, சுறுசுறுப்பாக நாவல் எழுதி முடிக்கும் எழுத்தாளர்களைக் கண்டால் எனக்குக் கொஞ்சம் பொறாமையாகக்கூட இருக்கிறது."

**- எஸ்.சந்திரமௌலி**

படம் : பொன்னாச்சி சுந்தரம்





# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்**
**எம். மோகன், ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# புதுமை!

டிசம்பர் மாத சென்னை இசை விழாக்களை இணைத்து சுற்றுலா வளர்ச்சியை மேம்படுத்த, மாநிலச் சுற்றுலாத்துறைத் செயலாளர் திரு. இறையன்பு யோசனை தெரிவித்திருக்கிறார்.

"பெரிய அளவுக்குச் சுற்றுலாப் பயணிகளை ஈர்க்க வேண்டும். சென்னையில் அவர்கள் அதிக தினங்கள் தங்கியிருக்க வேண்டும். அவர்கள் இங்கே நிறையச் செலவு செய்ய வேண்டும்!" என்கிறார் இறையன்பு.

இதற்காக சபாக்கள், ஹோட்டல்கள், டூர் ஏஜெண்டுகள் இவர்களுடன் கைகோத்துக் கொண்டு இந்தப் பெரிய கலைவிழாவுக்கு உலகளாவிய உல்லாசப் பயணிகளை எப்படி ஈர்ப்பது என்று யோசித்து வருகிறது அரசு.

சென்னை மியூசிக் அகடமி செயலர் ராம்ஜியிடம் கேட்டோம்:

"மார்கழி கலைவிழாவையொட்டி தமிழகத்தில், குறிப்பாகச் சென்னையில் சுற்றுலாப் பயணிகள் வருகையும் பங்கேற்பும் அதிகரிக்க வேண்டும். இதற்காக சபா அரங்குக்கு வெளியேயும் கலை தொடர்பான நிகழ்வுகள் ஏற்பாடு செய்ய வேண்டும். ரோட்ஷோ, இசை - நடன விழா குறித்த கையேடுகள் விநியோகிப்பது, வந்து தங்கி நிகழ்ச்சிகளை ரசிக்க விரும்பும் சுற்றுலாப் பயணிகளுக்கு இடவசதிகள் ஏற்பாடு செய்து கொடுப்பது, நம்முடைய கலை, கலாசாரத்தைப் பற்றிப் பிற நாட்டினர் அறிந்து கொள்ளும் வகையில் நிகழ்ச்சிகள் நடத்துவது என்பதெல்லாம் எங்கள் விருப்பம்.

டெல்லியில் புரானா கிலா (பழைய கோட்டை), ரெட் ஃபோர்ட் போன்ற சுற்றுலா இடங்களின் முன் கலை நிகழ்ச்சிகள் நடத்துவது போல, உலகப் புகழ்பெற்ற மெரீனா கடற்கரை, கபாலி கோயில் முன்புறம் போன்ற இடங்களிலும் மெகா நிகழ்ச்சிகள் நடத்த வேண்டும். அப்போதுதான் உலக அளவில் நம் கலைகளுக்கு ஓர் அங்கீகாரம் கிடைக்கும்'' என்கிறார் ராம்ஜி.

''உங்கள் எண்ணத்தை அரசு எந்த அளவு ஏற்கும்?"

''இந்த யோசனையே அரசு சுற்றுலாத் துறை செயலர் இறையன்பு அவர்களிடமிருந்து வந்ததுதான்!" என்கிறார் ராம்ஜி.

• ரஞ்சனி - காயத்ரி



• சுதா ரகுநாதன்



• எஸ்.சௌம்யா

அரசு இசை விழாவில் தலையை நுழைப்பது, இசை நிகழ்ச்சிகளைச் சீர்படுத்துமா அல்லது இது போன்ற கடை பரத்தும் நிகழ்வுகளால் கலை நீர்த்துப் போகுமா? அரசின் சட்டதிட்ட கெடுபிடிகளால் அபஸ்வரங்கள் ஒலிக்குமா? என்று சில இசைக் கலைஞர்களிடம் அவர்கள்தம் கருத்தைக் கேட்டோம்:

• இறையன்பு



**சுதா ரகுநாதன்:** இது வரவேற்கப்பட வேண்டிய யோசனை. அரசே இதில் அக்கறை காட்டுகிறது என்கிறபோது, அதிக அளவில் மக்களைச் சென்றடையும் வாய்ப்பு இருக்

# இசை விழா: அரசு நுழைந்தால் அபஸ்வரமாகுமா?

கிறது என்பதோடு, விழாவுக்குக் கூடுதலாக பலமும் சேரு கிறது. ஆனால் அரசு புதிதாக ஏதும் நிபந்தனைகள் விதிக்கா மல், கலை உணர்வை அல்லது இசை உணர்வைத் தூண்டு கிற அளவில் மட்டுமே செயல்பட் டால் நல்லது. இப்போது எப்படி நடக்கிறதோ அதில் மாற்றம் கொண்டு வராமல், குறுக்கீடுகள் ஏதும் செய்யாமல், ஆதரவு தரும் வகைகளைப் பற்றி யோசித்துச் செயல்படலாம்.



• காயத்ரி கிரீஷ்

**சஞ்சய் சுப்பிரமணியன்:** ஒரு குறிப்பிட்ட வட்டத்தி



• சஞ்சய் சுப்ரமணியன்

விருந்து வெளியே இன்னும் தெரிகிற வாய்ப்பு விசிபிலிட்டி கிடைக்கும். ஃபிலிம் ஃபெஸ்டி வலுக்குக் கிடைக்கிற மாதிரியான கவனிப்பு இதற்கும் கிடைக்கும் என்பதால், சுற்றுலாத் துறை அதைப் பயன் படுத்திக் கொள்ளும் வாய்ப்பு இருக்கிறது. அப்போது தேசிய மற்றும் சர்வதேச அளவில் நம் இசை யின் தாக்கம் செல்லும் போது, மீடியாவின் பார்வையும் கூடுதலாகக் கிடைக்கலாம். 'நல்ல சங்கீதத்தைத் தருவது எங்கள் பொறுப்பு' என்பதைக் கலைஞர்கள் கவனத்தில் கொண்டால் போதும்!

**பாம்பே ஜெயஸ்ரீ:** சபாக்களிடையே எளிதான போக்கு வரத்து. சீசன் சமயத்திலாவது பதினைந்து நாட்களுக்குப் போக்குவரத்துக் கட்டுப்பாடுகள் (ஒன்-வே ஒழுங்கு முறை), பார்க்கிங் வசதிகள், சுத்தமான டாய்லெட் வசதிகள், சத்தம் போடாத மின்விசிறிகள், வசதியாக அமர்ந்து கேட்க நாற் காலிகள் என்று நிறைய முன்னேற்றங்களும் கூடவே ஏற்பட் டால், நிறைய சுற்றுலாப் பயணிகள் இசைவிழா சீஸனை ரசிப்பார்கள். குறைவான ரசிகர்களுடன் ஒரே இடத்தில் நாலு சபாக்கள் இசைவிழா நடத்துவதை விட, அவர்கள் ஒன்று சேர்ந்து ஒரே இடத்தில் நிகழ்ச்சி நடத்தினால், டூரிஸ்ட்டுகளுக்கு அலைச் சல் மிச்சமாகும். உலகளவில் நம் இசையை எடுத்துச் செல்ல இது ஓர் அரிய வாய்ப்பு.

**ஆர்.கிருஷ்ணசாமி (செய லாளர் நாரத கான சபா):** சில ஆண்டுகளுக்கு முன்பே தமிழக அரசு தரப்பிலிருந்து இப்படி ஒரு யோசனை வெளிப்பட்டது. நாங்களும் உள்ளூர்ப் போக்குவரத்து, விடுதி அறைகள் பதிவு குறித்தெல் லாம் பல யோசனைகள் தந் தோம். தஞ்சை, மதுரை, திருச்சி, கோவை போன்ற வரலாற்றுச் சிறப்புமிக்க நகரங்களுக்கு விழாவை விஸ்தரிக்கவும் ஆலோசனை தந்தோம். ஆனால் அதன் பிறகு ஏதும் நடக்கவில்லை.

**எஸ்.சௌம்யா:** தரம் ஏதும் குறையாமல், பாமர மக்களுக்கு நம் இசையை எடுத்துச் செல்வது நல்லது தானே? பல இடங்களில் இசை கேட்கும்போது, அது பற்றிய விழிப்புணர்ச்சி

வரும். தேவாரம், திவ்யப்பிரபந்தம், மாரிமுத்தா பிள்ளை பாடல்கள் எல்லாம் அதிகம் பாட வாய்ப்புகள் உருவாகும். கலைஞர்களுடன் கௌரவமான நியாயமான ஒப்பந்தங்கள் செய்து கொண்டு நல்ல சன்மானம் அளிப்பதும் முக்கியம்.

**டி.எம்.கிருஷ்ணா:** நல்ல யோசனை. அரசு அளவில் ஆதரவும், கட்டமைப்பு வசதிகளும் செய்து கொடுத்தால் நன்றாக இருக்கும். 'நாங்களும் கச்சேரி ஏற்பாடு செய்கிறோம்' என்று கிளம்பாமல், கச்சேரிகள் நடத்துவந்த எல்லாம் இப்போது போல சபாக்களிடமும், தனியாரிடமுமே விட்டுவிட வேண்டும். சுருக்கமாகச் சொன்னால், 'காடலிஸ்ட்' எனப்படும் கிரியா ஊக்கியாக இயங்கி, சுற்றுலாத்துறை உல்லாசப் பயணிகளிடையே நமது கலை விழாவுக்கு ஒரு புதிய உயர் பரிமாணம் தர முடியும்.

• டி.எம்.கிருஷ்ணா



• பாம்பே ஜெயஸ்ரீ

**காயத்ரி கிரீஷ்:** அதிக அளவு மக்களிடையே நம் இசை பற்றிய விழிப்புணர்வு நிச்சயம் உண்டாகும். அதற்காகத் தரத்தில் சமரசம் செய்து கொள்ளக் கூடாது. சர்வதேச அளவுக்கு இசை அறிமுகப்படுத்தப்படும் வாய்ப்பு என்பதால் ஸ்பான்சர்களின் பங்கும் கூடும். மொத்தத்தில் பாமரர்களுக்கும் இசை சென்றடையக் கூடிய வாய்ப்பு இதன் மூலம் அதிகரிக்கும்.

**ரஞ்சனி - காயத்ரி:** ரேடியோவும், சங்கீத நாடக அகடமியும் அரசு சார்ந்த அமைப்புகளாக இருந்தபோதும், இசையை இன்றளவும் வளர்த்து, ஆதரித்து வந்திருக்கின்றன. ஆகவே டிசம்பர் விழாவில் அரசு பங்கேற்பதால் தரம் நீர்த்துப் போகாது. நம்முடைய பாரம்பரிய இசையை அதன் தரம் குறையாமலும், அதன் மதிப்பு கெடாமலும் பாதுகாத்து, உலகெங்கும் உள்ளவர்கள் அறியச் செய்ய இது நல்ல வாய்ப்பு.

இந்திய இசை என்றாலே ரவிசங்கரும், சிதார் இசையும்தான் என்று எண்ணிக் கொண்டிருக்கும் அயல்நாட்டினருக்கு, கர்னாடக சங்கீதம், பரத நாட்டியம், பிற தென்னிந்திய மரபுக் கலைகள் என புதியதொரு உலகைத் திறந்துவிடும் ஜன்னலாக இந்த முயற்சி அமைய முடியும் என்று பல இசைக் கலைஞர்கள் கருத்து சொன்னார்கள்.

நமது அண்டை மாநிலமான கேரளாவில், சுற்றுலாத்துறை இன்று பல மாநிலங்களோடு போட்டி போட்டுக் கொண்டு தங்கள் மாநிலத்தை நேஷனல் - இன்டர்நேஷனல் அளவில் பிரசாரம் செய்து முன்னணியில் இருக்கிறது.

பாலக்காடு நகரத்திலுள்ள புராதன கல்பாத்தி கிராமத்துக்கு 'ஹெரிடேஜ் வில்லேஜ்' என்ற அந்தஸ்து அளித்து, அவர்கள் மேற்கொண்டிருக்கும் முயற்சிகள் ஓர் எடுத்துக்காட்டு. அங்கே இருக்கிற நாலைந்து கோயில்கள் தங்கள் தேர்த் திருவிழாவை தனித் தனியே சிறிய அளவில் நடத்திக் கொண்டிருந்தன. சமீப காலமாக, கேரள சுற்றுலாத்துறை அக்கறை எடுத்துக் கொண்டு, எல்லாவற்றையும் ஒருங்கிணைத்து, ஒருசேர நடத்துகிறது. இதையொட்டி நடைபெறும் இசைக் கச்சேரிகள் எட்டு நாட்களுக்கு எப்போதும் போல் எந்தத் தலையீடுமின்றி அழகாக நடக்கின்றன. மாவட்ட கலெக்டர் விழாக் குழு உறுப்பினர். உள்ளூர்க் கலைஞர்களுக்குத் தவறாமல் வாய்ப்புகள் அளிக்கப்படுகின்றன. கம்யூனிஸ்ட் அரசு வந்த பிறகும் கோயில் திருவிழாவுக்கு எந்தக் குறைபாடும் இல்லை.

**- சாருகேசி**

அட்டை, படம்: **ஸ்ரீஹரி**

As per BIS,
IS:2888-1983.



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
# தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் சின்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. சின்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே சின்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




மேனிப் பராமரிப்பு என்றென்றும்

Orchard B GCPMSOCN 1167/06



• அழகற்ற அரங்கேற்றம்!



• சோதனைக் காலம்!

ஆபரேஷன் செய்யும் மருத்துவ மனைகள் இனி அரசின் கண் காணிப்புக்கு உட்படுத்தப்படுமாமே - சுகாதார அமைச்சர் சொல்லி யிருக்கிறாரே?

! உடல் உறுப்பு தானம் வேறு; வியா பாரம் வேறு. இது தொடர்பான அரசின் கொள்கை வகுக்கப்பட்டு, சட்டம் உருவாகி, அது பிரபலப்படுத் தப்பட வேண்டும். தவிர, உறுப்பு தானம் அல்லது விற்பனையில் நேரக் கூடிய அபாயங்கள் குறித்தும் பிரசாரம் தேவை. அனைத்துத் துன்பங்களுக்கும் அடிப்படை வறுமை, கல்வியின்மை. இவற்றை ஒழிப்பதை அரசு முதல் கடமை யாகக் கருதிச் செயலாற்ற வேண்டும்.

● கே.எஸ்.கோவர்த்தனன், சென்னை-42

? "புத்தரைப் போல் நானும் மஞ்சள் துண்டு அணிகிறேன்" என்கிறாரே

# கற்பூர நாயகியே மெட்டு

முதல்வர்? புத்தர் வீடு, மனைவி, மக்களைத் துறந்தவரல்லவா?

! ஆட்சியையும் ராஜ்ஜியத் தையும் கூடத் துறந்தவர்!

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? ஆறாம் வகுப்பிலிருந்து விழிப்புணர்வு, தூய்மை, சுகாதாரம் போன்ற வற்றுடன் பாலியல் கல்வியையும் வழங்குவது குறித்து தமிழக அரசு பரிசீலித்து வரு கிறதே?

! இது கத்திமேல் நடக்கும் வித்தை. பாடத் திட்டம் கவனமாக வடிவமைக்கப்படா விட்டால் விளைவுகள் விபரீதமாகப் போய்விடும்! எச்சரிக்கை, கவனம், குழந்தை மனவியல் பற்றிய ஆழ்ந்த அறிவு - யாவும் தேவை.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

? தமிழகம் முழுவதும் சிறுநீரக மாற்று



• மாசும்...



• ... மாற்றும்!

# குத்துப் பாட்டாகலாமா?

● ஜெ.மகேஸ்வரி, மதுரை - 4

**? 'மத்தியப் பிரதேச பள்ளி மாணவர்கள் சூரிய நமஸ்காரம் செய்வதைக் கட்டாய மாக்கக் கூடாது'' என ஹைகோர்ட் உத்தரவிட்டுள்ளதைப் பற்றி...?**

! திணிப்பு, எதிர்ப்பு, தீர்ப்பு, காழ்ப்பு என்ற ரூட்டில் மற்றொரு விவகாரம். 'உடற் பயிற்சி' என்றால் ஏற்கப்படும்; சூரிய நமஸ் காரம் என்று மதச்சார்புடையதாக்கினால் திணிப்பதாகத்தான் கருதப்படும்.

● மல்லிகா அன்பழகன், சென்னை - 112

**? ஆன்மிக அமைப்புகள் சுனாமி வீடு கட்டித் தருவதைப்போல் அரசியல் கட்சிகளும் தங்கள் நிதியிலிருந்து சமூகப் பணிகள் செய்யலாமே?**

! எந்தக் கட்சியிடம் எவ்வளவு பணம் உள்ளது என்பதெல்லாம் சிதம்பர ரகசியம். சமூகப் பணிகளுக்குப் பல கோடி செலவிடும் அளவில் பணம் இருப்பதாகக் காட்டிக் கொள்ள மாட்டார்கள். அப்புறம் தேர்தல் சமயம் அள்ளிவிட போதிய பணம் இருக்காது!



• 'சோ'வென்று பாராட்டு!

● உஷா, சென்னை - 4

**? முலாயம்சிங் யாதவ் குளித்ததால் புனித கங்கை மாசுபட்டுவிட்டதாக மாயாவதி குற்றம் சாட்டுவதைப் பற்றித் தங்கள் கருத்து...?**

! யமுனையை மாசுபடுத்திய குற்றச் சாட்டிலிருந்து திசை மாற்றும் கமெண்ட்.

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை-12

**? விஜயகாந்த் அலுவலகங்களில் வருமான வரிச் சோதனை - அரசியல் பின்னணி உள்ளதா?**

! இருக்கலாம் என்பதாலேயே விஜயகாந்த் தரப்பில் நடந்திருக்கக்கூடிய குற்றங்கள் சரியாகிவிடமாட்டா!

● ஏ.ஆர்.ஜம்புலிங்கம், சென்னை - 54

**? சரத்பவாரிடம் கிரெக் சாப்பல் நடந்து கொண்ட விதம்; கிரெக் சாப்பலிடம் மோஹானாரா நடந்துகொண்ட விதம்...?**

! முன்னது உற்சாக மிகுதியில் நடந்த தற்செயலான தவறு; பின்னது திட்ட மிட்ட தாக்குதல். தவறுக்கு மன்னிப்பு உண்டு; குற்றத்துக்கு மன்னிப்பு இல்லை.

● எஸ்.ஜானகி சுப்ரமண்யன், திருப்பூர் - 1

**? சிறுவர் சீர்திருத்தப் பள்ளிகளின் தற்போதைய நிலை?**

! சமீபத்தில், பெங்களூரில் உள்ள ஒரு சிறுவர் சீர்திருத்தப் பள்ளியிலிருந்து நாற்பது சிறுவர்கள் தப்பிச் சென்றதாகச் செய்தியைப் படித்த பிறகு, சீர்திருத்தப் பள்ளிகள் குறித்து கவலையே ஏற்படுகிறது.

● ச.ஆ.கேசவன், இனாம் மணியாச்சி

**? இந்திய - ரஷ்ய உறவால் மேலை நாடுகளான அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய வற்றுடனான நம் உறவு பாதிக் கப்படுமா?**

! பாதிக்கப்படாது; சமன்படும், பாதுகாக்கப்படும். காரணம், வல்லரசுகளிடையே பனிப்போர் இன்று இல்லை. பொருளாதாரப் போட்டிதான் நிலவுகிறது.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

**? சிறுநீரகத்தைப் பறிகொடுத்த மீனவப் பெண்களுக்காக அ.தி.மு.க. போராடும் என ஜெ. அறிவித்துள்ளாரே?**

! சுனாமியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உலகம் முழுவதிலுமிருந்து வந்து குவிந்த பல கோடிகளை முறைப்படுத்தி, அதன் பயன் முழுமையாக, பாதிக்கப்பட்ட மக் களுக்குப் போய்ச் சேர்ந்ததா என்று

கொஞ்சம் கவனித்திருந்தால் அந்த மக்கள் சிறுநீரகம் விற்க முற்பட்டிருக்க மாட்டார்கள். இப்போது இந்தப் போராட்டமும் தேவையற்றதாகியிருக்கும்.

● எம்.பாஸ்கர், திண்டுக்கல்

**? திருப்பதி உண்டியலில் ஐம்பது லட்ச ரூபாய்க்குக் கள்ள நோட்டுகள் விழுந்துள்ளதாமே?**

! கடவுளையும் ஏமாற்ற முடியும் என்று கருதுவோரின் அறிவீனச் செயல்!

● சிவசுப்பிரமணியன், அண்ணாமலை நகர் ✱

**? மனிதர்களிடம் அன்போடு நடந்து கொள்பவர்கள் சொர்க்கத்தை அடைய வாய்ப்பு உண்டா?**

! சொர்க்கம் என்று எதைச் சொல்கிறீர்கள்? அது மேகங்களைத் தாண்டி இருப்பதாகத் தெரியவில்லை. நீங்கள் அன்பைச் செலுத்திய அடுத்த கணமே எதிராளியின் கண்களில் அதைக் காணலாம்.

● ஆர். வஸந்தா, சென்னை - 28

**? நம் நாட்டில் வறுமையாலும் பிணியாலும் துன்பப்படுவோர் கோடிக்கணக்கில் இருக்க, குடியரசு தின ஆடம்பர - ஆர்ப்பாட்டங்கள் அவசியமா?**

! வறுமை, பிணியை விடவும் நாட்டுச் சுதந்திரமும் தனி மனித சுதந்திரமும் முக்கியம். அதனால் ஆகஸ்ட் 15, ஜனவரி 26 முக்கியம்.

● ஜி.பி.இலட்சுமி நாராயணன், நகரி

**? மிகவும் பிரபலமான 'கற்பூர நாயகியே கனகவல்லி' என்ற பாடலை 'தாமிரபரணி' படத்தில் குத்துப் பாடலாகப் போட்டுள்ளனரே?**

! ஏற்கெனவே பிரபலமான வேறு சில பாடல்களை இதைப்போல் உல்டா செய்தபோது ரசித்து, கைதட்டியதற்குக் கிடைத்த தண்டனை! சில குழந்தைகளின் குறும்புகளை ரசிக்க ஆரம்பித்தால், அவர்கள் உற்சாகத்தில் எல்லையைத் தாண்டுவார்கள். அப்போது ஓர் அதட்டு அதட்ட வேண்டும். இப்போது கோடம்பாக்கத்துக்கு அப்படி ஓர் அதட்டல் தேவை!



• தற்செயல்...



• ... தவறு!

● எஸ்.விஜயலட்சுமி, ஸ்ரீவில்லிபுத்தூர்

**? 'கவர்னரின் அறிக்கையைக் குப்பைத் தொட்டியில் போடுங்கள்' என்று சொல்வது முன்னாள் முதல்வருக்கு அழகா?**

! அவரும் அவர் கட்சியினரும் செய்கிற அழகற்ற காரியம் இது ஒன்று மட்டும் தானா?

● வீர.செல்வம், பூம்புகார். ❒

**? மூன்றாவது நீதிபதி தீர்ப்பு அளிப்பதற்கு முன் தி.மு.க. கூட்டணியில் உள்ள சென்னை மாநகர உறுப்பினர்கள் 98 பேர் ராஜினாமா செய்துள்ளனர். அவர் சொல்லப் போகும் தீர்ப்பில், தேர்தல் நியாயமாக நடந்தது என்று சொன்னால் மறு தேர்தல் என்பது தண்டச் செலவாகத் தானே முடியும்?**

! தேர்தல் அநியாயமாகத்தான் நடந்தது என்று இறுதித் தீர்ப்பு வந்தால் இரட்டைத் தலை குனிவாகி தலைநிமிரவே முடியாதே! அதனால்தான்! இப்போது பாருங்கள்- சோ உள்பட எல்லோரும் முதல்வரைப் பாராட்டுவதை! ●

❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:

வீர செல்வம்,
பல்லவனம்,
பூம்புகார் அஞ்சல்,
சீர்காழி தாலுகா - 609 105

✱ ரூ.50/- பரிசு பெறுபவர்:

சிவசுப்பிரமணியன்,
4 S3, இணைப்பு IV, முத்தையா நகர்,
அண்ணாமலை நகர் - 608 002

# உலகை ஆசீர்வதிப்பதற்கு
# வேத பண்டிதர்களுக்கான அழைப்பு



மஹரிஷி வேத விக்யான் விஸ்வ
வித்யாபீடம்
இந்தியாவின் பிரம்மஸ்தான்
'கரோந்தி' ஜபல்பூர் அருகில்
சிகோரா மாவட்டம்
மத்தியப் பிரதேசம்

**மேற்கண்ட மகரிஷியின் நிறுவனம் ஐந்து வேதங்களை, ஐந்தாயிரம் வேத பண்டிதர்களைக் கொண்டு கரோந்தியில் வேத பாராயணம் மற்றும் யக்ஞம் செய்ய உத்தேசித்துள்ளது.**

**அவரவர் தகுதிக்கேற்ப கீழ்க்கண்ட முறையில் தட்சணை வழங்கப்படும்:-**

1. ஐந்து வேத சம்ஹிதாவில் கணபாடம் முடித்தோருக்கு மாதம் ஒன்றுக்கு — ரூ. **7,000/-**
2. கணபாடம் முடித்தோருக்கு மாதம் ஒன்றுக்கு — ரூ. **6,000/-**
3. சம்ஹிதாபதி முடித்தோருக்கு மாதம் ஒன்றுக்கு — ரூ. **5,000/-**
4. சிலமாதங்களில் சம்ஹிதா பாடம் முடிக்க இருப்போருக்கு மாதம் ஒன்றுக்கு — ரூ. **4,000/-**
5. மந்திர சம்ஹிதா தெரிந்தோர் மற்றும் பஞ்ச தேவதாவில் ஏதேனும் ஒன்றுக்கு யக்ஞம் நடத்தத் தெரிந்தோருக்கு மாதம் ஒன்றுக்கு — ரூ. **4,500/-**
6. மந்திர சம்ஹிதா பயிலும் மற்றும் யக்ஞம் நடத்தத் தெரிந்த கர்மகாண்டப் பண்டிதர்களுக்கு மாதம் ஒன்றுக்கு — ரூ. **3,500/-**

**(தங்களது படிப்பினை இவர்கள் பிரம்மஸ்தானிலே பூர்த்தி செய்து கொள்வதுடன் மாதச் செலவினை தட்சணையில் கிடைக்கும் ரூ.2000/-ல் பூர்த்தி செய்து கொள்ளலாம்.)**

**பின் குறிப்பு:** அனைவருக்கும் உணவு, உடை, தங்கும் இடத்திற்காக மாதத் தட்சணையில் இருந்து ரூபாய் 2,000/- பிடித்துக் கொள்ளப்படும்.

**தொடர்பு கொள்ள வேண்டிய சென்னை முகவரி :**

**திரு தி.சி.பெருமாள்,**
மஹரிஷி வேத் விக்யான் விஸ்வ வித்யாபீடம்,
28, டாக்டர் குருசாமி சாலை,
சேத்துப்பட்டு, சென்னை - 31.
தொலைபேசி: 044 - 26427088, 98407 90871

# டைரக்டராகும் ஹீரோ!

டியர் வாசகாஸ்! லஜ்ஜாவதியோடு ஸ்பெஷல் வணக்கம்! ரொம்ப நாளா சினிமா இண்டஸ்ட்ரி குறித்த செய்திகளை எழுதணும்னு ஆசை... எடிட்டர் அனுமதி கொடுத்துட்டாரா...த்தோ ஆஜராயிட்டேன். கோடம்பாக்கத்த வலம் வந்தப்ப, ரொம்ப பிஸியா இருந்த ஒரு ஆளைப் பார்த்தேன். விசாரிச்சா, அவர் பேரு கோபால். டைரக்டர் கம் தயாரிப்பாளர். சமீபத்துல 'துள்ளுற வயசு'ங்கற பேர்ல ஒரு படம் சென்னை, மதுரைல மட்டும் ரிலீஸாகியிருக்கு. படம் ஓடின தியேட்டர்ல போய் மக்களோட கருத்தைக் கேட்டிருக்கார் டைரக்டர் கோபால். அவங்க சொன்னதுபோல ஓடிக்கொண்டிருந்த படத்தை நிறுத்தி பாடல் காட்சிகள், சில சண்டைக் காட்சிகள், க்ளைமாக்ஸ் காட்சிகளை படம் பிடிச்சு மாத்தி, படத்தோட பேரையும் 'இதயம் உனக்காக'ன்னு மாத்தியிருக்கார். மறுபடியும் படம் சென்ஸார் செய்யப்பட்டிருக்கு.


* ஜெய் ஆகாஷ்

'மாத்தின டைட்டில் நல்லாருக்கா'ன்னு மறுபடியும் மக்கள்கிட்ட கேட்க, பழைய 'துள்ளுற வயசு' டைட்டில்தான் 'ஓகே'ன்னு சொல்லியிருக்காங்க. சரின்னு பழைய டைட்டிலோடவே படத்தை மறுபடியும் வர்ற பிப்ரவரி 14ஆம் தேதி ரிலீஸ் பண்ணப் போறார் கோபால். ம்... இப்படியும் சில மனிதர்கள்!

அடுத்து நான் சந்திச்சது 'ஈ' பட டைரக்டர் எஸ்.பி.ஜனநாதனை. "இந்திய சினிமா பேச ஆரம்பிச்சு எழுபத்தஞ்சு வருஷமாச்சு. இதனைச் சிறப்பிக்கிற வகையில பைசெல் இன்டெரக்ஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் நிறுவனமும், உலகாயுத மையமும் இணைஞ்சு பிப்ரவரி 16, 17, 18 தேதிகள்ல சென்னை நந்தம்பாக்கம் டிரேட் சென்டர்ல ஒரு கண்காட்சிக்கு ஏற்பாடு பண்ணியிருக்காங்க. இதுல உலகின் பல நாடுகளைச் சேர்ந்த திரைத் தொழில் நுட்பக் கருவிகளோட தயாரிப்பாளர்களும், கலைஞர்களும் கலந்துக்கறாங்க. கூடவே திரைப் படக் கருவிகளும் பார்வைக்கு இடம்



பெறப் போகுது'' என்றவர்,

''சிந்துநதிப் பூ படம் பார்த்தியா லஜ்ஜா? அதுல கதாநாயகனா நடிச்ச ரவிதான் பைசெல் நிறுவனத்தோட இயக்குநர். அவர்தான் இதை நடத்தறார்'' என்றார்.

**வ**ரும்போது பக்கத்துல இருந்த ஸ்டுடியோவுக்குள்ள எட்டிப் பார்த்தா, நம்ம ரகுவரன் சார் அகப்பட்டார். கொஞ்சம் பர்சனலா ஃபேமிலியைப் பத்தி பேசினார். அப்படியே அடுத்து பண்ற 'வங்கி'ன்ற படம் பத்தியும் சொன்னார்.

''ஒரு பேங்க்ல 500 கோடி ரூபா பணம் இருக்கு. அதைக் கொள்ளையடிக்க திட்டம் போடுறார் இந்தி நடிகர் ஜாக்கி ஷெராப். அவரோட கூட்டாளிகள் நானும், அப்பாஸும். நாங்க வங்கிக்குப் போறோம். ஆனா அங்கேருந்து 100 கோடி ரூபாய மட்டும்தான் கொள்ளையடிக்க முடியுது. அதை ஒரு பாழடைந்த கிணத்துல போட்டு மூடி வைக்கறோம். போலீஸ் எப்படி துப்பறிஞ்சு கண்டுபிடிக்கறாங்கங்கறது கதை'' என்றவரிடம் ''பாபா வந்திருந்தாரே போய்ப் பார்த்தீங்களா?''ன்னேன். ''சாய்ராம்'' என்றார். ஓடி வந்துட்டேன்.



* 'வங்கி' படத்தில்..



* 'மதன்' படத்தில் சுனேனா...

**ஆ**பீஸுக்கு வந்ததுமே ஜெய் ஆகாஷ்கிட்டருந்து போன். ''என்ன லஜ்ஜா, என்னைப் பார்க்காமலே வந்துட்ட...'' என்று ரொம்ப வருத்தப்பட்டார். 'ஸாரி' சொல்லிட்டுப் பேசினேன்.

''ஒரு சந்தோஷமான விஷயம். முதல் முறையா நான் டைரக்ட் பண்றேன்.''

''அப்ப நடிக்கலையா?''

''அதுவும்தான். மூணு ஹீரோயின்ஸ். தமன்னா, சுனேனா, இன்னொரு முன்னணி ஹீரோயின். படம் பேரு 'மதன்'. ஒரு பகுதி படப்பிடிப்பு முடிஞ்சுடுச்சு. மூணு கால கட்டங்கள்ல கதை நடக்குது. என் எடையைப் பத்து கிலோ குறைச்சு நடிச்சிருக்கேன்'' என்றார். ஆல் த பெஸ்ட் ஆகாஷ்!

●

புதிய பகுதி



# கல்கி



2007 பிப்ரவரி 11
விய தை 28
மலர் : 65
இதழ் : 28

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- *பாரதியார்*

## வேண்டாம் புறக்கணிப்பு!

சென்னை மாநகராட்சி கவுன்ஸிலர்களுக்கான மறுதேர்தல் அறிவிப்பை எதிர்கட்சித் தலைவர் பாராட்டி வரவேற்காவிட்டாலும் பாதகமில்லை. ஆனால், அந்த மறுதேர்தலையே புறக்கணிப்போம் என அவர் அறிவித்திருப்பது மிகுந்த பாதகத்தையே விளைவிக்கும்.

எதிர்கட்சியின் புறக்கணிப்பால் ஆளுங்கட்சியினரோ அல்லது அவர்கள் கூட்டணியினரோ மீண்டும் அனைத்து இடங்களிலும் வெற்றி பெறுவது, தேர்தல் நடைபெறாத நிலையிலேயே உறுதியாகிவிடும்.

தி.மு.க. கூட்டணி அல்லாத உறுப்பினரைத் தேர்வு செய்ய எண்ணுகிற வாக்காளர்களுக்கு, தங்கள் விருப்பத்துக்கிசைய வாக்களிக்கிற வாய்ப்புகூட இல்லாமல் போகும். ஒருவர் வெற்றி பெற்றாலும், அவரை எதிர்த்தவருக்கும் கணிசமான வோட்டுகள் கிடைத்துள்ளன என்ற கணிப்புக்கு இடமில்லாது போகும்.

ஜனநாயகத்துக்கு முரண்பட்டதான இப்படியொரு நிலைமைக்கு வழிவகுக்காமல், ஜெயலலிதா தமது புறக்கணிப்பு முடிவை மாற்றிக்கொள்வது நல்லது.

அவ்வாறு மாற்றிக் கொள்ளாவிட்டால், தோல்விக்குப் பயந்து தேர்தலைப் புறக்கணிக்கிறார் என்ற அவப்பெயர் ஏற்படுவதுடன், ஜனநாயக அமைப்பும் பலவீனப்பட்டுப் போகும்.

உள்ளாட்சி அமைப்புகளும் கிராம நிர்வாக அமைப்புகளும் ஜனநாயகத்தின் ஆணிவேர் என்று கொள்ளப்படுகின்றன. அவற்றுக்கு முறைப்படி தேர்தல் நடத்தாமல் குண்டர் ராஜ்ஜியத்தை அனுமதித்தது ஆளுங்கட்சி செய்த மிகப்பெரிய தவறுதான்.

ஆனால், அத்தவறைத் திருத்தி ஜனநாயக முறைமையை






நிலைநாட்ட இப்போது நல்வாய்ப்புக் கிடைத்துள்ளது.

தேர்தலில் ஜெயித்துக் காட்டுவதால் மட்டுமே ஜனநாயக மரபுகளைக் காக்க முடியும் என்று எண்ணலாகாது. தேர்தலில் நிற்பதும் தோற்பதும்கூட அந்த மரபுகளை வலுப்படுத்தவே செய்யும். பிரசார கட்டத்தில் (தனிநபர் தாக்குதலைத் தவிர்த்து) திட்டங்கள், வளர்ச்சிப் பணிகள் - அவற்றுக்கான நிதி ஒதுக்கீடுக் கொள்கைகள் என்று மக்களுக்கு விமர்சனமும் விளக்கமும் அளித்து வந்தால், அவர்கள் நன்கு சிந்தித்து வாக்களிக்க உதவும். எதிர்ப்பைக் கூட நாகரிக எல்லைகளுக்கு உட்பட்டு வலிவுடன் வெளிப்படுத்தி வர, மக்கள் இரு தரப்புகளையும் எடைபோட்டு முடி வெடுக்க முடியும்.

சட்டசபையிலும்கூட, ஆக்கபூர்வமான நடவடிக்கையைத் தவிர்த்து, புறக்கணிப்பு நடைமுறையை அ.தி.மு.க.வினர் பின்பற்றுவது வேதனைக்குரிய விஷயம். கறுப்புச் சட்டை அணிந்து அவைக்குச் செல்வது, தனிநபரை எதிர்த்துக் கோஷமிடுவது, வெளிநடப்புச் செய்வது அல்லது வெளியேற்றப்படும் அளவுக்கு அமளியில் ஈடு படுவது, ஆளுநர் உரையைக் 'குப்பைத் தொட்டியில் போட வேண்டும்' என்று அவ மதித்துப் பேசுவது... இவையெல்லாம் செய்தியில் இடம்பெற உதவுமேயொழிய மக்கள் மனத்தில் இடம்பெற உதவாது.

இத்தகைய (நெகடிவ்) புறக்கணிப்புப் போக்கு, அவை நடவடிக்கைகளில் விவாதத்துக்கே இடமின்றிச் செய்து விடுகிறது. ஆளுங்கட்சி, தான் நினைத்ததை எவ்வித இடையூறுமின்றி நிறைவேற்றிக் கொள்ளவும் முக்கியமான புதிய மசோதாக்கள் விவாதமேயின்றி சட்டமாகவும்தான் இது வழி செய்கிறது.

சட்டமன்ற நடைமுறைகளை மதித்து, உரிய வாய்ப்புக்குக் காத்திருந்து, வலுவான வாதங்களை முன் வைத்தால் ஆளுங்கட்சியின் தவறான முடிவுகளைத் தடுத்து நிறுத்தவோ, மாற்றவோ வாய்ப்பு உண்டு. அந்த வாதங்கள் மக்களையும் விழிப் புணர்வுகொள்ளச் செய்யும்.

விவாதங்களை அனுமதியாத, மதியாத அளவுக்கு முதல்வரோ, சபாநாயகரோ சர்வாதிகாரப் போக்குடையவர்கள் அல்லர். விவாதங்களை முன் வைக்கும் திறமையும் வாக்கு வன்மையும் எதிர்கட்சித் தலைவியிடம் இல்லாமலில்லை. 'எதையும் எதிர்ப்பது' என்ற ஆரோக்கியமற்ற குறுக்குவழி அரசியலைக் கைவிட்டு, 'எதையும் ஆராய்வது' என்ற மக்கள் நல அரசியலைக் கைகொள்ள வேண்டும். ○

**சு**தா சேஷய்யனின் 'ஸ்ரீலலிதா'வை வாரா வாரம் படித்து ஆனந்தம் அடைவதுடன், ஒவ்வொரு வாரமும் வரும் அம்பாளின் ஓவியங்கள் எல்லாவற்றையும் சேர்த்து ஓர் ஆல்பம் போலவே தயாரித்து வருகிறேன். ஒவ்வோர் ஊரிலிருக்கும் அம்பாளின் பல ஸ்வரூபங்கள், நேரில் சென்று காண முடியாதவர்களுக்கு ஒரு வரப்பிரசாதம்.

**- டி.எம்.பானுமதி, சென்னை-88**

**உ**ற்சாக ரஜினி.. உருகிய தனுஷ்! புல்லரித்துப்போன பூபதி பாண்டியன்! கல்கி ஒரு திருவிளையாடல் கலாட்டா!

**- திருமருகல் எஸ்.விவேகானந்தன், சென்னை**

**'ம**ன்னிச்சுடு ஆனந்தி' சிறுகதை யதார்த்தமான படைப்பு. நந்தினியின் பாசம், பரவசத்தின் உச்சம்!

**- க.சுந்தர், நெய்வேலி**

**நி**ழலை நிஜமென்று நம்பி வாழும் இன்றைய சூழலில் நிஜத்தின் ருசியைக் காட்டியது 'இதுதான் நிஜம்' சிறுகதை.

**- எஸ்.கருணையானந்தம், உசிலம்பட்டி**

**'ப**ணம், புகழைவிட எனக்கு மரியாதைதான் அவசியம்' என்ற ஸ்ரேயா வாசகர்களின் நெஞ்சில் நிறைந்து விட்டார்!

**- வி.பெரியசாமி, அரியலூர்**

**'அ**ழகுப் போட்டிப் பரிசைக் கடவுளுக்கு அல்லவா கொடுக்க வேண்டும் அல்லது அந்த அழகிகளின் பெற்றோர்களுக்கு அல்லவா அளிக்க வேண்டும்!' என்ற அமரர் கல்கியின் கருத்து, மிகவும் அழகு!

**- கே.கஸ்தூரி கதிர்வேல், வேலூர்**

**ம**க்கிப் போய்க்கொண்டிருக்கும் சுற்றுபுறச் சூழலைக் காப்பாற்ற வந்திருக்கும் மக்கும் பிளாஸ்டிக், உண்மையிலேயே வரவேற்கத்தக்கது.

**- கே.மோகனசுந்தரம், பாளையங்கோட்டை**



# பாசத்தின் பரவசம்!

**பா**ரதியார் யானை அடித்துத்தான் இறந்தார். வயிற்றுப் போக்கால் அல்ல. அவர் இறந்தபோது கவிஞர் இராஜரிஷி அர்த்தநாரிச வர்மா, பாரதிக்கு எழுதிய இரங்கற்பாவில் இதை முதல் வரியிலேயே குறிப்பிட்டுள்ளார்.

**- ச.சிவராமகிருஷ்ணன், சென்னை-94**

கவிதை

ரேவதி

# பிரிவைச் சொன்ன கணம்...



இரைச்சல் மீதுறும்
கடற்கரை வெளியில்
நம்மிடையே
நாற்காலியிட்டு
அமர்ந்திருந்தது மௌனம்

துயரில் கசியும்
கண்களைத்
துடைக்க இயலாது
மீளும் உன் கரம்

நிர்ப்பந்தங்களைச்
சொல்லி
நியாயப்படுத்துகிறாய்
உன் முடிவை...

நீ
பிரிவைச் சொன்ன
கணத்திலிருந்து
என் சுவாசத்தில்

வீசத் தொடங்கிவிட்டது
உயிர் கரிந்த வாசனை

இமைகளைத் திறந்து
கொட்டப்பட்டுவிட்டது
ஈர அமிலம்

இதயம் பிளந்து
உயிர் வெளிவந்துவிட்டது
அந்த நிமிடம்

+2

# சென்டம் ரொம்ப ஈஸி!

**போ**ன வாரம் இந்தப் பகுதியில பேசின பாரதிக்குத் தூண்டுகோலா இருந்த சீனியர் ஸ்டூடண்ட் வேற யாருமில்லைங்க, அது நான்தான். 'கோர் சப்ஜெக்ட்ஸ்'னு சொல்லப்படுகிற கணிதம், இயற்பியல், வேதியியல் பாடங்கள்ல சென்டம் வாங்க சில சுலபமான வழிமுறைகளை இப்போ நான் உங்களுக்குச் சொல்லித் தர்றேன்.

### கணிதம்

டெக்ஸ்ட் புக்ல என்ன கணக்குப் பாடங்கள் இருக்கோ, அதேதான் தேர்வுகள்லேயும் வரும். அதனால முழுப் புத்தகத்தையும் பயிற்சி பண்றதுதான் சென்டம் வாங்கறதுக்கான ஒரே வழி. விடைத்தாள் திருத்தறவங்க ஒரு விடைத்தாளுக்கு எடுத்துக்கற அதிகபட்ச நேரம் பத்து நிமிடங்கள். அதனால ஒவ்வொரு வரியா படிக்க மாட்டாங்க. கான்செப்டைப் புரிஞ்சு எழுதினோமாங்கிறதுலதான் அவங்க கவனம் இருக்கும். 'டைமன்ஷன்ஸ்' பாடத்துல படங்கள் எதிர்பார்ப்பாங்க. மீட்டர், மில்லிமீட்டர் போன்ற யூனிட்கள்ல தவறு செய்யவே கூடாது. தியரிட்டிகல் ஜியாமட்ரியில ஸ்டெப்ஸ் எல்லாம் கரெக்டா இருக்கணும். பொதுவா எல்லாப் பள்ளிகள்லேயும் டிசம்பரிலேயே முழுப் பாடங்களும் நடத்தி முடிச்சுடுவாங்க. இதனால நாம பலமுறை போட்டுப் பார்த்த கணக்குகளைத்தான் தேர்வுகள்லேயும் எழுதுவோம். எந்தப் படபடப்பும் இல்லாம எழுதினா நிச்சயம் என்னை மாதிரி நீங்களும் கணிதத்துல சென்டம் வாங்கலாம்.

### இயற்பியல்

எப்பவுமே கேள்வித்தான் வரிசைப்படிதான் பதில்கள் எழுதணும். ஒரு மார்க், இரண்டு மார்க் வினாக்களை சரியா பண்ணினாலே நாம சென்டம் வாங்கறது உறுதியாயிடும். விளக்கம், படங்கள், ஃபார்முலா மற்றும் யூனிட் எல்லாம் இரண்டு மார்க் விடைகள்ல நிச்சயம் இருக்கணும். ஐந்து, பத்து மதிப்பெண்களுக்கான கேள்விகள் எழுதும்போது சில சமயம் சோம்பல் வரும். இதை ஸ்கூல் தேர்வுகளிலேயே கண்டுபிடிச்சு நீக்கிடணும். சோம்பல்னால சில முக்கியமான பாயிண்ட்ஸ் விடுபட வாய்ப்பிருக்கு. இயற்பியல் தேர்வுகள்லேயும் யூனிட் எழுதறதுல கவனமா இருக்கணும்.

### வேதியியல்

ஆர்கானிக் மற்றும் இன்ஆர்கானிக் கெமிஸ்ட்ரியிலிருந்து சரிசமமா கேள்விகள் வரும். ஈகுவேஷன்ஸ் ரொம்ப முக்கியம். இதுல கோட்டைவிட்டா அப்புறம் மதிப்பெண்கள்ல நிறைய இழக்க வேண்டியிருக்கும். அடிக்கடி படிச்சாத்தான் சில பாடங்கள் மனசுல நிற்கும். கான்செப்ட் மறந்து போகுதுன்னா கவலைப்படாம மனப்பாடம் பண்ணி

# ஐஸ்வர்யா மீனாட்சி

டுங்க. பாடவாரியாப் படிக்காம ஈகுவேஷன்ஸை மையமா வைச்சுப் படிச்சா மதிப்பெண்கள் கூடுதலாக் கிடைக்கும். ஆர்கானிக் கெமிஸ்ட்ரியில சம்ஸ் மட்டும் இருக்கும். இடைவிடாத பயிற்சிகளால அதையும் நம் கைக்குள்ளே கொண்டு வரணும். பத்து மதிப்பெண் களுக்கான பதில் எழுதும்போது அலட் சியமா செஞ்ச ஒரு தவறால எனக்கு ஒரு மார்க் குறைஞ்சு கடைசியில அண்ணா யுனிவர்சிட்டியில இடம் கிடைக்காம போயிடுச்சு. தேர்வுக்கு முன்பே இது மாதிரி தவறுகளை நீக்கப் பழகிக்கணும்.

சில பொதுவான விஷயங்களும் சொல்றேன். மொழிப் பாடங்களுக்குத் தலைப்புகள் ரொம்ப முக்கியம். முன்னுரையிலிருந்து ஆரம்பிச்சு நாம எழுதுற எல்லா விஷயங்களுக்கும் தலைப்பு வைச்சாத்தான் எழுதினதுக்கு அதிக மதிப்பெண்கள் கிடைக்கும். ஆங்கிலம் மற்றும் தமிழ்த் தேர்வுகளுக்குக் கடினமான ஸ்டைலான வார்த்தைகள் முக்கியம் கிடையாது. இலக்கணப் பிழை இல்லாம எழுதப் பழகணும்.

நிறையப் பேருக்கு ப்ளஸ்டூ தேர்வு களோட மதிப்பே தெரியலை. நான் ஸ்டேட் ஃபர்ஸ்ட் வந்தது இன்னிக்கு வரைக்கும் உதவுது. அறிவுச் செல்வம் இருந்தா உலகத்தோட எந்த மூலை முடுக் கிலும் மரியாதை கிடைக்கும். அதனால ப்ளஸ் டூ படிக்கிற அந்த ஒரு வருஷம் நம்மை உருக்கி எடுத்துடணும். என் பெற்றோரே பயப்படுற அளவுக்கு நான் தூக்கத்தைத் தொலைச்சுப் படிச்சேன். எனக்கு ரொம்பப் பிடிச்ச பரதநாட்டியத்தை

---

ஐஸ்வர்யா மீனாட்சி, 2002ஆம் ஆண்டில் 1188 மதிப்பெண்கள் எடுத்து தமிழ்நாட்டிலேயே முதலிடம் பெற்றார். பி.ஈ. கம்ப்யூட்டர் சயின்ஸ் முடித்து இப்போது அமெரிக்காவில் ஸ்காலர்ஷிப் உதவியோடு எம்.எஸ். படித்துக் கொண்டிருப்பவரின் கனவு - எம்.பி.ஏ. முடித்து சிறந்த நிர்வாகவியல் நிபுணர் ஆவது.

---

ஒதுக்கி வைச்சேன். இதோட நம்ம உடல்நலத்துக்கும் கூடுதல் அக்கறை செலுத் தணும். அடிக்கடி பால் குடிச்சா நீண்ட நேரம் படிக்க உதவும்.

- ச.ந.கண்ணன்

# வீட்டு விடுதலையாகி...

"அப்பா... எனக்குக் கல்யாணத்துல சுத்தமா விருப்பமில்லே... தயவுசெஞ்சி என்னை வற்புறுத்தாதீங்க... ப்ளீஸ்..."

சுவாமிநாதன் இப்படிப் பேசியதைக் கேட்டு அதிர்ச்சியடைந்த சுந்தரேசன், "என்ன நீ... இப்படிப் பேசறே... எனக்கு நீ ஒரே மகன்... நம்ம குடும்பம் தழைக்க உனக்கொரு கல்யாணத்தப் பண்ணி வைக்கறதுதானே முறை... சரி என்னை விடு... உங்கம்மா இந்தப் பேச்சைக் கேட்டா துடிதுடிச்சுப் போயிடுவாளே!"

"என்னமோ தெரியலேப்பா... இந்தக் குடும்பம்... மனைவி... பிள்ளை... எதுவும் எனக்குப் பிடிக்கலே. எந்தப் பற்றுமில்லாம 'ஏகாந்தியா' இருக்கவே என் மனசு பிரியப்படறது..."

"சரி... சரி... இந்தப் பேச்சை இத்தோடு விடு. உனக்கு ஆபீசுக்கு நேரமாறது. நாம அப்புறமா இதப் பத்திப் பேசலாம்," என்று அப்போதைக்கு மகனுடைய கல்யாணப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தார் சுந்தரேசன்.

ஒரு ஞாயிற்றுக் கிழமையன்று சுவாமிநாதனை வீட்டின் மொட்டை மாடிக்குக் கூட்டிச் சென்று மீண்டும் அவனது கல்யாணப் பேச்சை ஆரம்பித்தார்.

சுவாமிநாதனும் கல்யாணம் வேண்டாம் என்பதிலேயே உறுதியாயிருந்தான்.

"இதோ பாருடா... நான் நம்ம குடும்பம் விளங்கணும்னு ஆசைப்படறேன். நீ 'அது என்னோடு முடிந்து போகட்டுமேப்பா' என்கிறாய். சரி... உன் இஷ்டம்... ஆனா நீ உன் அம்மாவ எப்படி சமாதானப்படுத்துவே? உனக்கு அம்மா பேர்ல கொள்ளை பிரியம். உன்னோட இந்த முடிவால அவ கண்கலங்கறதப் பார்க்க நீ விரும்புறியா? அவள எப்படிச் சமாளிக்கப் போறே...சொல்லு..." என்றார்.

"அதுதாம்ப்பா எனக்கும் புரியலே..."

"அப்ப நான் சொல்றதைக் கேளு... உன்னை வளர்த்து ஆளாக்கின உங்கம்மா மனசு நோகக்கூடாதுன்னா... நீ கல்யாணத்துக்குச் சம்மதிக்கணும்..."

சிறிது நேரம் மௌனமாக இருந்த சுவாமிநாதன் "என்னமோ செய்யுங்க..." என்று விரக்தியுடன் சம்மதித்தான்.

எப்படியோ அவன் கல்யாணத்துக்கு ஒப்புக் கொண்டதே பெரிய விஷயம் என்றெண்ணிய சுந்தரேசன், கூடுமான வரையில் அவனுக்கு எந்தத் தொந்தரவையும் தராமல், அவனுக்கு ஏற்ற வகையில் நல்ல குடும்பப் பெண்ணைப் பார்க்க ஆரம்பித்தார்.

எங்கெல்லாமோ அலைந்து கடைசியில் சிவகங்கை மாவட்டம் புதுவயல் என்ற ஊரில் சுவாமிநாதனுக்குப் பொருத்தமான ஒரு பெண்ணைப் பார்த்தார் சுந்தரேசன்.

பெண்ணின் பெயர் சாரதா. சாரதாவுக்கு அம்மா கிடையாது; அப்பா மட்டும்தான். அவளுக்குப் பிறகு பத்தாண்டுகள் கழித்து ஒரு தம்பியும் தங்கையும் இரட்டைப் பிறவிகள். இந்தக் குழந்தைகள் பிறந்த ஒரு வருஷத்துக்கெல்லாம் சாரதாவின் அம்மா இறந்து விட்டாள். எப்படியோ சாரதாதான் அப்பாவுக்கு மகனாக... சின்னஞ்

# க.ஒப்பிலி அப்பன்



சிறிய குழந்தைகளுக்குத் தாயாக இருந்து குடும்பப் பொறுப்பைக் கவனித்து வரு கிறாள்.

சுந்தரேசனுக்கும் அவருடைய மனைவி கமலாவுக்கும் சாரதாவைப் பார்த்த மாத்திரத்திலேயே பிடித்து விட்டது. சாரதாவின் அமைதியான சுபாவம், ஆடம்பரமில்லாத எளிமை கலந்த அழகு, இனிமையான பேச்சு... அவளது செயலில் தெரிந்த நளினம்... இவ்வளவும் சுவாமிநாதனுக்கு ஒரு பொருட்டாகத் தெரியவில்லை! அவன் பெற்றோர்களைப் பார்த்து ''உங்கள் இஷ்டம்'' என்று ஒரே வார்த்தையில் சொல்லிவிட்டான்!

கல்யாணம் புது வயலில் எளிமையாக நடந்து முடிந்தது...

சென்னைக்குக் கிளம்பும் சமயம்...

அப்பாவையும்... விவரம் தெரியாத தனது தம்பி தங்கையையும் பார்த்து சாரதா கண்கலங்கிய போது, எல்லோருக்கும் மிகவும் வருத்தமாகத்தான் இருந்தது. அந்தக் குழந்தைகள் இரண்டும் அக்காவைப் பார்த்து, "அக்கா... நீ எங்கள விட்டுப் போயிடுவியா?" என்று பரிதாபமாகக் கேட்டபோது, யாரைச் சமாதானப் படுத்துவது? இதுவரை ஒரு தாய் ஸ்தானத்திலிருந்து தனது தம்பி - தங்கையை வளர்த்த சாரதாவையா? அல்லது பாசத்துக்கு ஏங்கும் அந்தச் சின்னஞ்சிறுசுகளையா? குழப்பத்தில் தவித்தனர் சுந்தரேசன் தம்பதி!

ஆனால் அதற்கு அவசியமேயில்லா

# மாற்றம்!

தேசிய ஊனமுற்றோர் பொருளாதார மேம்பாட்டுக் கழகம் (NHFDC) ஊனமுற்றோரின் பிரச்னைகளுக்காகப் போராடி வருகிறது. இவ்வமைப்பு ஊனமுற்றோர் தங்குவதற்கான கட்டடங்கள், சிறப்பு வசதிகள் கொண்ட இரயில், பேருந்துகளைக் கேட்கிறது; இலவச பஸ் பாஸ், தொழிற்கல்வி, உயர் கல்வி மற்றும் வேலை வாய்ப்பில் மூன்று சதவிகித இட ஒதுக்கீடு வழங்கக் கோருகிறது. வங்கிகளில் சுய வேலைவாய்ப்புக் கடன் வசதிகளையும் வேண்டுகிறது. இவற்றை எல்லாம் ஒட்டுமொத்த கோரிக்கையாக வலியுறுத்தி அண்மையில் மாநில மாநாடு ஒன்றை நடத்தியது NHFDC அமைப்பு. "ஊனமுற்றோர் வாழ்வில் இது பெரும் மாற்றத்தை ஏற்படுத்தும்" என்கிறார்கள் இதன் அமைப்பாளர்கள்.

— வள்ளி



தந்தைப் போல சாரதாவே தன்னைச் சுதாரித்துக் கொண்டு தனது அப்பாவையும் தம்பி - தங்கையையும் சமாதானப் படுத்திவிட்டுப் புறப்படத் தயாரானாள்...!

சென்னைக்கு வந்த சாரதாவுக்குப் புது சொந்தங்கள்... புது வாழ்க்கை... அதற்கு முற்றிலுமாகத் தன்னை வெகு விரைவில் தயார்ப்படுத்திக் கொண்டு விட்டாள்...! வாய்க்கொரு தடவை 'அப்பா... அப்பா' என்று தன் மாமனாரிடம் அன்பு காட்டுவதிலும் சரி... மாமியாரின் தேவைகளைக் குறிப்பறிந்து செய்வதிலும் சரி... சாரதா ஒருவித ஈடுபாட்டுடன் நடந்து கொண்டாள். இதில் ஆச்சரியம் என்னவென்றால், புதிய மனைவி என்ற ஹோதாவில், தன்னை வெளியே கூட்டிச் செல்லவோ, தனக்கு இது வேண்டும்... அது வேண்டும் என்றோ ஒரு நாள் கூட, அவள் தன் கணவனைக் கேட்டது இல்லை என்பதை சுந்தரேசனும் கவனித்தார்!

அப்பொழுதுதான் அந்தச் சம்பவம் நடந்தது...

அன்று காலை மணி ஏழு இருக்கும்...

சுவாமிநாதன் தனது அறையில் ஏதோ வேலையாக இருந்தான். சுந்தரேசன் ஹாலில் செய்தித்தாளைப் புரட்டிக் கொண்டிருந்தார்... அப்போது தொலைபேசி மணி கிணுகிணுங்கியது!

புதுவயலிலிருந்து சாரதாவின் தந்தைதான் பேசினார்... சம்பந்தியையும் மாப்பிள்ளையையும் விசாரித்த அவர் தனது மகளிடம் பேச வேண்டும் என்றார். சுந்தரமூர்த்தி சமையற்கட்டில் வேலையாக இருந்த சாரதாவைக் கூப்பிட்டு ஃபோனை அவளிடம் கொடுத்தார்.

தனது மகளிடம் சிறிது நேரம் பேசிய அவர், அவளது தம்பியும் தங்கையும் அவளை உடனே பார்க்கப் பிரியப்படுவதாகக் கூறி 'அவர்களிடம் பேசு' என்றார்.

'நான்... நீ...' என்று போட்டி போட்டுக் கொண்டு அவர்கள் தங்களது அக்காவிடம் பேச ஆரம்பித்தனர்.

"எங்களுக்கு லீவு விட்டாச்சக்கா... உனக்கு எப்பக்கா லீவு...? இல்லேன்னா நீ லீவு போட்டுட்டு வாயேன்..." என்றான் அவளுடைய தம்பி.




அவர்களை நேரில் பார்க்க முடியாத ஏக்கத்தை மறைத்துக்கொண்டு, தன்னை லீவு எடுக்கச் சொல்லும் அவனது அப்பாவித்தனத்தை நினைத்துக் கலகலவென்று சிரித்தாள் சாரதா!

"டேய் மண்டு... எனக்கேதுடா லீவு... நான், உனக்குப் பாட்டிபோல இருக்கும் என் மாமியாரைப் பார்த்துக்கணும். மாமாவைக் கவனிக்கணும். உங்க அத்திம்பேரைப் பார்த்துக்கணும். எவ்வளவு வேலையிருக்கு இங்கே. நான் சட்டுனு புறப்பட்டு வர முடியாது; புரிஞ்சுக்கோ. ஆனா அதுக்காக நீ அழக்கூடாது. கண்டிப்பா நான் உங்களப் பார்க்க வருவேன்..." என்று தன் தம்பியைச் சமாதானப்படுத்திய சாரதா, மீண்டும் தனது அப்பாவுக்கும் ஆறுதல் சொன்னாள்!

சாரதாவின் இந்த உரையாடலை உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்த சுந்தரேசன் அவன் உள்ளே சென்றதும், சுவாமிநாதனின் அறைக்குள் சென்றார்...

''சாரதா ஃபோன்ல பேசுனதைக் கேட்டியா... நீ என்னமோ சொன்னியே, எனக்கு எதிலும் பற்றில்லைன்னு... இப்ப நிஜமா அப்படிப் பற்றற்றவளாக இருக்கிறது யார்ன்னு தெரிஞ்சுதா?' ஒரு தாயைப் போல பல வருஷம் கூட இருந்து வளர்த்த தனது சொந்த தம்பி - தங்கை மீதான பாசத்தை, கல்யாணமான ஒரே நாள்ல துறந்துவிட்டு நம்முடன் வந்தவள் அவள். சுவாமிநாதா, பற்று அறுவது வேறு... வெறுப்பு கொள்வது வேறு... உனக்கு வாழ்க்கையில வெறுப்பு ஏற்பட்டிருக்கு. பற்றற்றவனுக்கு எதிலும் வெறுப்பு கூடாது... தீவிர ஆசாபாசங்களும் கூடாது. அப்படிப் பார்த்தா சாரதாவுக்குத் தான் அப்படிப்பட்ட மனப்பக்குவம் இருக்கு என்கிறேன் நான்..." என்றார்!

சிறிது நேரம் மௌனமாகயிருந்த சுவாமிநாதன், "ஆமாம்ப்பா... நீங்க சொல்றது உண்மைதான். அவளோட பக்குவப்பட்ட மனசுல ஒரு பரவசத்த ஏற்படுத்தணும். அதனால நான் இன்னிக்கே புதுவயலுக்குப் போய், அவளோட தம்பியையும் தங்கையையும் கூட்டிகிட்டு வரேன்!" என்றான்!

●





சங்கப் பாடல்களுக்கும் ஆழ்வார் பாசுரங்களுக்கும் தொடர்பு நிறையவே உண்டு. குறிப்பாக, அகத்துறைப் பாடல்களின் விதிகளை பக்தி இலக்கியத்துக்கு ஏற்ப மாற்றிக் கொடுத்த பெருமை ஆழ்வார்களைச் சேரும். குறுந்தொகையின் 337ஆம் பாடலைப் பாருங்கள்.

முலையே முகிழ்முகிழ்த்தனவே, தலையை
கிளைஇய மென்குரல் கிழக்கு வீழ்ந்தனவே,
செறி முறை வெண் பலும் பறிமுறை நிரம்பின;
சுணங்கும் சில தோன்றினவே; அணங்குதற்கு
யான் தன் அறிவல்; தான் அறியலனே;
யாங்கு ஆகுவள்கொல் தானே
பெரு முது செல்வர் ஒரு மட மகளே பொதுக்கயத்துக் கீரந்தையார்

முலைகள் அரும்பின;
தலைமயிர் நீண்டு தாழ்ந்தது;
பால் பற்கள் விழுந்து முளைத்துவிட்டன;
உடலில் தேமல் தோன்றியுள்ளது;
எனக்குத் தெரிகிறது,
அவளுக்கு இன்னும் புரியவில்லை.
பணக்காரர்களின் ஒரே பெண்
என்ன ஆகப் போகிறாளோ?

# பருவமடையாதப் பெண்!



பொதுக்கயத்துக் கீரந்தையார் என்னும் சங்ககாலப் புலவர் பாடிய இந்தப் பாடல் பருவமடையத் தொடங்கியிருக்கும் பெண்ணைப் பற்றியது. 'அதன் அடையாளங்கள் எனக்குத் தெரிகின்றன; அவளுக்குத் தெரியவில்லை' என்று அவளுக்குப் பருவம் வாய்த்தது தன்னை வருத்தியதாக தலைவன் சொல்வது போன்ற பாட்டு. நம்மாழ்வார், பருவம் இன்னும் அடையாத பெண் திருவேங்கடப் பெருமான் மேல் கொண்ட காதலைப் பற்றி செவிலித் தாய் கவலைப்படுவதாக மாற்றி நளினப்படுத்தியிருக்கிறார்.

"முலையோ முழு முற்றும் போந்தில மொய் பூங்குழல்குறிய
கலையோ அரையில்லை நாவோ குழறும் கடல்மண் எல்லாம் விலையோ என
மிளிரும் கண் இவள் பரமே பெருமான்
மலையோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகமே"

(குழல் கூந்தல், குறை சிறியது, கலை ஆடை, அரை இடுப்பு)

தலைமகள் இளமைக்குச் செவிலி இரங்குவதாக உள்ள இந்தப் பாட்டில், 'இந்தப் பெண்ணுக்கு மார்பே இன்னும் பெரிசாகவில்லை. தலைமயிர் வளரவில்லை. ஆடைகள் இடுப்பில் நில்லாமல் நழுவுகின்றன. பேச்சு சரியில்லை. கண்கள் உலகை விலை பேசும் அளவுக்கு மிளிர்கின்றன. பெருமாள் இருப்பது திருவேங்கடம் என்று மட்டும் கூறுகிறாள் இந்தப் பேதைப் பெண்' என்று ஒரு தாய் இன்னும் பருவம் எய்தாத தன் மகள் திருமாலையே எண்ணுவதை நினைத்து மனம் வருந்துவதுதான் இதன் நேரடி அர்த்தம்.

இந்தப் பாடலின் 'ஒரு மாதிரியான' விஷயத்தை வைணவர்கள் அப்படியே ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். 'ஸ்வாபதேச' அர்த்தத்தின்படி 'முலை முற்றும் போந்தில' என்றால் பக்தி இன்னும் முழுவதும் பரமபக்தியாகவில்லை. 'குழல் குறிய' என்றால் தலையால் செய்யப்படும் வணக்கம் போதாது. 'கலை அரையில்லை' என்பதை முயற்சி இன்னமும் நிறைவேறவில்லை. இப்படி கெட்டால் போட்டுச் சுத்தப்படுத்திதான் ஏற்றுக் கொள்கின்றனர்.

(படிக்கலாம்)

# அலர்ஜி அலர்ட்!

"'ஹையய்யோ கூல்டிரிங்க்ஸா! எனக்கு ஆகாதுங்க. என்னது 'மேக்கப்பா! எனக்கு அலர்ஜியாகிடுமே' என்றெல்லாம் ஒரு சிலர் அரண்டு புலம்புவதைக் கேட்டிருப்பீர்கள். ஒவ்வொருவருடைய உடம்பும் ஒரு சில விஷயங்களை ஏத்துக்கிறதில்ல. இந்த ஒவ்வாமையைத்தான் 'அலர்ஜி'ன்னு சொல்றோம். ஒருவருடைய உடம்பு ஏத்துக்கிற பொருள், இன்னொருவருக்கு அலர்ஜியா மாறலாம். இது அவரவர் உடம்பைப் பொருத்தது. உதாரணத்துக்கு, பலருடைய நோய்க்கு மருந்தா இருக்கிற 'பென்சிலின்' சிலருக்கு விஷம். அதனாலதான் பென்சிலின் ஊசி போடுவதற்கு முன்பு அலர்ஜி டெஸ்ட்டாக ஒரு 'குட்டி ஊசி' போட்டுப் பரிசோதித்துவிட்டு, பிறகு பென்சிலினைப் போட வேண்டியிருக்கு" என்கிறார் சென்னை சாந்தோம் சைனஸ் & நோஸ் மருத்துவமனையின் தலைமை மருத்துவரும், காது, மூக்கு, தொண்டை நிபுணருமான டாக்டர் துளசிதாஸ்...

**அலர்ஜி எதனால் ஏற்படுகிறது டாக்டர்?**

"ஈரத்தன்மைகூட சிலருக்கு அலர்ஜியை ஏற்படுத்தலாம். மிக முக்கியமானது டஸ்ட்! வீட்டில் வளர்க்கப்படும் நாய், பூனை, ஆடு, மாடு, குதிரை, கோழி, வாத்து என மிருகங்கள், பறவைகள், செல்லப் பிராணிகளாலும் அலர்ஜி ஏற்படலாம். 'மைட்ஸ்' எனப்படும் கண்ணுக்குத் தெரியாத மிக மிக நுண்ணியப் பூச்சிகள் நம் வீட்டு மெத்தை, தலையணைகளிலும், கார்பெட்களிலும் கோடிக்கணக்கில் குடி கொண்டிருக்கின்றன. துல்லியமாகச் சுத்தம் செய்த தலையணையிலேயே சுமார் ஐம்பதாயிரம் 'மைட்ஸ்' இருக்குமாம். இதற்குத் தீனி என்ன தெரியுமா? நம்ம உடம்பில் இருக்கும் இறந்துபோன செல்கள்



தான். 'மைட்ஸ்' மூலம்தான் பெரும் பாலும் அலர்ஜி ஏற்படுகிறது.

உணவு, மலர்கள், நறுமணப் பொருட்களாலும்கூட இப்பிரச்னை ஏற்படலாம்."



• டாக்டர் துளசிதாஸ்

**அறிகுறிகளை எப்படித் தெரிந்து கொள்வது?**

"தொடர்ச்சியாக தும்மிக்கொண்டே இருப்பார்கள். மூக்கிலிருந்து நீர் வடியும். நமைச்சல், மூக்கடைப்பு போன்றவை உண்டாவதால், வாசனை அறியும் தன்மை குறையும். தலை வலிக்கும். கூடவே தொண்டைப் புண், சைனஸ் பிரச்னை என்று இம்சைகளுக்கு அளவே இருக்காது.

மூக்கில் அலர்ஜி ஏற்பட்டால் மூக்கைக் கசக்கிக்கொண்டே இருப்பார்கள். ஒரு சிலர் மூக்கை உள்ளங்கையால் அழுத்தித் தேய்ப்பார்கள். இதை 'அலர்ஜி சல்யூட்' என்று நாங்கள் செல்லமாக அழைப்பதுண்டு. அப்பாவுக்கோ, அம்மாவுக்கோ அலர்ஜி இருந்தால் அது குழந்தைக்கும் வர வாய்ப்பு இருக்கு. இது குழந்தைப் பருவத்தில் தோல் சம்பந்தப்பட்ட அலர்ஜியாகவும், இளம் பருவத்தில் மூக்கு சம்பந்தப்பட்ட அலர்ஜியாகவும், வயதான பருவத்தில் ஆஸ்துமாவாகவும் வாய்ப்புகள் உண்டு."

**குறிப்பிட்ட பொருள்தான் அலர்ஜி என்பதை எப்படிக் கண்டுபிடிக்கலாம்?**

"தும்மல், அரிப்பு போன்ற அலர்ஜி அறிகுறிகள் ஏற்படும்போதெல்லாம் என்ன சாப்பிடுகிறோம், அப்போதைய சூழல், இருந்த இடம் போன்ற விவரங்களை டைரியில் எழுதி வைத்துக்கொள்ள வேண்டும். ஐந்து அல்லது ஆறு தடவை இப்படி எழுதிய குறிப்பை வைத்து அலர்ஜிக்கான காரணம் அல்லது தூண்டுதலைத் தீர்மானிக்கலாம். மேலும் அலர்ஜி டெஸ்ட் செய்தும் பிரச்னைக்கான காரணியைக் கண்டறியலாம்."

**இதனைக் குணப்படுத்த என்னதான் வழி?**

"அலர்ஜியை ஏற்படுத்துகிற குறிப்பிட்ட பொருளே பேஷண்டுக்கு மருந்தாகத் தரப்படும். இதை 'இம்யூனோ தெரபி' என்பார்கள். அலர்ஜியைத் தரக்கூடிய அந்தப் பொருளின் பவரை நூறாயிரம் மடங்கு குறைத்து, அதிலிருந்து 0.1 மில்லியை வாரம் இரண்டு தடவை பேஷண்ட் உடம்பில் ஏற்றி, பிறகு படிப்படியாக மருந்தின் அளவை அதிகரித்துக் கொண்டே வந்தால், நாளடைவில் அந்தப் பொருளால் பேஷண்டுக்கு அலர்ஜி ஏற்படுவது சரிசெய்யப்படும்.

அலர்ஜியின்போது மூக்கிலுள்ள டர்பினேட்டுகள் வீங்கிவிடும். இதை ஆபரேஷன் செய்தும், காட்டரைசேஷன் மூலமும் எண்டோஸ்கோபி சிகிச்சையின் மூலமும் சரி செய்யலாம். தவிர, 'ஸ்டீராய்டு ஸ்ப்ரே' செலுத்தியும் அலர்ஜியைக் குணப்படுத்த முடியும். பிராணாயாமம் போன்ற யோகப் பயிற்சிகளும், சுவாசப் பயிற்சிகளும் இதனைத் தவிர்க்கப் பெரிதும் உதவுகின்றன."

**அலர்ஜியைக் கவனிக்காமல் விட்டால் என்னவாகும்?**

"அலட்சியப்படுத்துவது என்பதே கூடாது. அலர்ஜி வந்தாலே அலர்ட்டாகிவிட வேண்டும். இல்லையெனில், அது ஆஸ்துமா, சைனஸ், நுரையீரல் பிரச்னை என்று பெரிய அளவில் கொண்டு போய் விட்டுவிடும்."

- அனுசுயா

படம் : பொள்ளாச்சி சுந்தரம்

தாமிரபரணி ஆத்து நெறய தண்ணி வழிஞ்சு ஓடுது. அருணாச்சலம் எப்போதும் போல குளிக்கப் போனாரு. இடுப்புல துண்டக் கட்டிக்கிட்டு, வேட்டிய நனைச்சுக் கல்லுமேல வச்சுட்டு ஆத்துல எறங்கி ஒரு முங்காச்சி போட்டுட்டு எழுந்து பாக்குறாரு, வேட்டியக் காணல! மனுசன்னா இதுக்குக் கோவம், படபடப்பு வரணுமே... ஆனா இந்த மனுசனுக்கு கோவமே வரல. அவரு கோவப்படுவாரு, ஏசுவார்னு ரொம்ப ஆசையோட எதிர்பார்த்த அவரோட மொறப் பொண்ணுங்க ஏமாந்துட்டாங்க. சாமி'ன்னு கெஞ்சினா. அதுக்கு அவரு 'தையல் (பெண்) எடுத்துப்போன துணி, தையலுக்கும் (தைப்பதற்கு) கூட ஆகாதே'ன்னு சிலேடையில பதில் சொல்லி யிருக்காரு. இந்தம்மாவும் வீட்டுக்கு வந்து வேட்டிய விரிச்சுப் பார்த்தா, வேட்டி முழு வதும் கண்ணு, கண்ணா (ஓட்டை) இருந் திருக்கு. சும்மா இருக்குமா மனுஷ வாயி?

இந்த சேதி ஊர் முழுக்கப் பரவிருச்சு. பொம்பளைங்க எல்லாம் அவர கையெடுத் துக் கும்பிட்டாக!

தான் வாழ்ந்த காலத்துல நெறய

# சோகம் தீர்த்த சேர்மன் சாமி!

அவங்களவிட அந்த வேட்டிய மொறப் பொண்ணுங்க சொல்லித் தூக்கிட்டு வந்த சின்னப் பொண்ணு இன்னும் ஏமாந்துருச்சு.

இவரு எந்த உணர்ச்சியையும் வெளிக் காட்டாம இடுப்புல கட்டுன துண்டோட போய்க்கிட்டே இருக்காரு. அப்போ அவரு எதுத்தாப்ல ஒரு ஜவுளி வியாபாரி வந்து 'ஐயா, வேட்டி வேணுங்களா'ன்னு கேட்டு அந்த வியாபாரியே ஜவுளி பொட்டலத்த எறக்கி, அதிலிருந்து ஒரு கச்ச வேட்டியை எடுத்துக் கொடுத்துட்டு பணங்கூட வாங் காமப் போயிட்டாரு. கொஞ்ச நேரத்துல அந்த வியாபாரி வந்தாருங்கறதுக்கான தடமே இல்லை. இதையெல்லாம் பாத்துக் கிட்டேயிருந்த அவரோட மொறக்கார பொண்ணுங்களுக்கு ரொம்ப அதிசயமா போயிருச்சு.

அந்த ஈரவேட்டிய எடுத்துட்டுப் போன சின்னப் பொண்ணு, அத தன் அம்மாகிட்ட கொடுத்து, நடந்த எல்லாத்தையும் கதையா சொல்லுச்சு. அதக் கேட்டோன்னே பதறிப் போயிட்டா அவ அம்மா. ஒட்டமா ஓடி வந்து அருணாசலத்துக்கிட்ட 'ஐயா, சின்னப் பொண்ணு...தெரியாம, அறியாம செஞ் சிட்டு. அவள தயவுசெஞ்சு மன்னிச்சுருங்க

அற்புதங்களைச் செஞ்சு காட்டுனாரு அரு ணாச்சலம். அதைப் பார்த்து வியந்த நெல்லைச் சீம கலெக்டரு, சிறுத்தொண்ட நல்லூரு கிராம முன்சீப்பா அவர நியமிச் சாரு. பொறவு அவர ஏரல் பஞ்சாயத்துத் தலை வரா (சேர்மன்) நியமிச்சாரு. சேர்மன் ஆனாலும் ஐயா பூஜை, புனஸ்காரம், ஜெபம், விஷக்கடி வைத்யம்ன்னு ஆன்ம விசாரம் எதையும் விடல.

மேலப்புதுக்குடியில சுடலைப் பேச்சின்னு ஒரு பொண்ணு. திடீர்னு அவளுக்கு ஒடம்பெல்லாம் கருந்தழும்பா திட்டுத் திட்டா ஆயிருச்சு. அவ புருஷன் அவள விட்டுட்டுப் போயிட்டான்.

பல வைத்தியர்கள்கிட்ட போயும் குண மாகாம மனசு நொந்து போயி கெடந்தப்ப, சேர்மன் ஐயாவப் பத்திக் கேள்விப்பட்டதும் நெஞ்சு நெறய நம்பிக்கையோட அவரப் பாக்க வந்தா. ஐயா அவளுக்குத் திருநீறு மந்திரிச்சுக் கொடுத்துட்டு, 'இந்தத் தீர்த் தத்தை தெனமும் குடிச்சிட்டு வா, திருநீற உடம்பெல்லாம் பூசிக்கிட்டே வா. அடுத்த மாசம் அமாவாசை அன்னிக்கு நா இருக்குற எடந்தேடி வா, மருந்து தாரேன், பூரணமா

# 5 கழனியூரன்

கொணமாயிரும்'னு தெய்வம் மாதிரி பதில் சொல்லி அனுப்பினாரு.

கடலப்பேச்சியும் அப்படியே செய்ய, கொஞ்சங் கொஞ்சமா தழும்பு கொறய ஆரம்பிச்சிருக்கு. திடீர்னு ஒரு நா சேர்மன் ஐயா தன்னோட சேக்காளி (நண்பன்) பால கிருஷ்ணமூர்த்தி நாடாரையும், தம்பி கருத்தப்பாண்டியையும் கூப்பிட்டு, 'எனக்கு ஆண்டவன்கிட்டயிருந்து அழைப்பு வந்துட்டு. வர்ற அமாவாசை அன்னிக்கு என்னைய அழைச்சுக்கிடுவான். என் உயிர் போன பொறவு என் உடம்ப ஊருக்குத் தெக்க தாமிரபரணி ஆத்தங்கரையில இருக்குற பெரிய ஆலமரத்துக்கு அடியில குழி தோண்டி, உக்கார்ந்த மாதிரி என்னை வச்சுடு. நா பயன்படுத்துன பொருட்களையும் அங்க வச்சிருக. வானத்துல ஒரு செங்குருடன் மூணு தடவ வட்டம் போடும். மூணாவது தடவ வட்டம் போடும்போது அது நெழலு எம்மேல படும். அதுக்குப் பொறவு மண்ணைப் போட்டுக் குழிய மூடிடுங்க'ன்னு அமைதியா, அழுத்தம் திருத்தமா சொன்னாரு. இப்படிச் சொன்ன போது அவருக்கு வயசு இருபத்தெட்டுதான்.

சேர்மன் தன்சாவப் பத்தி சொன்னது தீ மாதிரி ஊரெல்லாம் பரவிருச்சு. ஊரே கவலையோட அமாவாசைய எதிர்பார்த்திருந்துச்சு. அமாவாசயும் வந்துச்சு! சேர்மன் வழக்கம் போல எந்திரிச்சு, ஆத்துல குளிச்சுட்டு வந்து பூஜை புனஸ்காரமெல்லாம் முடிச்சார். வழக்கம் போல சாப்பிட்டுட்டு, பஞ்சாயத்து ஆபீஸுக்குப் போனாரு.



சரியா பத்தர மணிக்கு வீட்டுக்கு வந்தவரு, எல்லார்கிட்டயும் 'வரேன்'னு சொல்லிட்டுத் தன்னோட ரூம்ல போயி படுத்துக் கண்ண மூடிக்கிட்டாரு. கரெக்டா பகல் பன்னிரண்டு மணிக்கு அவர் உயிரு உடம்புல இல்ல. அவரு சொன்ன மாதிரியே அச்சுப் பெசகாம நடந்துருச்சு. இந்தச் சேதி ஊர் பூரா பரவ, அவரு வீட்டு முன்னால மக்க கூட்டம் தெரண்டு நிக்குது.

ஐயா சொன்ன மாதிரியே அவர் சொன்ன எடத்துல குழி வெட்டி, அவர உட்கார வச்சு, அவரு பயன்படுத்தின பொருள எல்லாம் போட்டாக. என்ன அதிசயம்! செங்கருடன் கரெக்டா வந்துச்சு. அவரு சொன்ன மாதிரி மூணு வட்டம் போட்டுச்சு. மூணாவது வட்டத்துல கருடன் நெழலு சேர்மன் சாமி மேல விழுந்துச்சு. அதுக்கப்புறம்தான் அவரை நல்லடக்கம் பண்ணினாங்க.

சேர்மன் ஐயா எறந்த சேதி கடலைப் பேச்சிக்குத் தெரியாது. அமாவாச அன்னிக்கு வரச் சொன்னார்ங்கறது நெனைப்புக்கு வந்ததும் போனா. போன பொறவுதான் தெரிஞ்சது அவரு சமாதியான வெவரம். உடனே அவ அவரு சமாதிக்குப் போயி வெள்ளந்தியா, 'ஐயா, வாக்குக் கொடுத்தீகளே, இப்படி நோய அரையுங் குறையுமா சுகமாக்கிட்டு ஆலமரத்துக்கடியில போயி உக்காந்துக்கிட்டீகளே'ன்னு கெடந்து அழுதா.

அப்ப அந்த வழியில வந்தக் கெழவனாரு அழுதுக்கிட்டு இருந்த கடலைப்பேச்சியப் பாத்து 'அழாத தாயி! சேர்மன் உசுரோட இல்லாட்டியும், அவரு எடம் தேடி வந்துட்டல்ல, உன் நோய் தீர்ந்து ராணியாட்டம் ஆயிருவ. அவரு சமாதி மண்ண எடுத்துத் திருநீறா பூசிக்கோ, தீர்த்தத்துக்கு ஊத்து தோண்டி, அதுல வர்ற தண்ணிய எடுத்துட்டுப் போ. இந்த மாதிரி இரண்டு அமாவாசைக்கு வந்துட்டு அவரக் கும்புட்டுப் போம்மா. இந்த மண்ணையும், ஊத்துத் தண்ணியையும் சேர்மன் நாமத்தச் சொல்லிப் பூசு. உன் நோய் தீரும் கடலைப் பேச்சி'ன்னு சொல்லிட்டு மாயமானாரு.

ஆளில்லாத அத்துவானக் காட்டுல திடீர்னு ஒருத்தரு வந்து, திடீர்னு போயிட்டாருன்னு நெனச்சு அதுவசப்பட்டா (அதிசயப்பட்டான்) கடலைப்பேச்சி. கெழவனாரு சொன்ன மாதிரியே செஞ்சா. ரெண்டு அமாவாசைக்கு சேர்மன் சாமி கோயிலுக்கு வந்துட்டுப் போனா. என்ன அதிசயம்! குஷ்டரோகி மாதிரி இருந்த பேச்சி, கண்ணுல ஒத்திக்கிற மாதிரி அழகாயிட்டா. இவளப் பிரிஞ்சுபோன புருஷனும், பொண்டாட்டி அழகப் பார்த்துத் திரும்பி வந்துட்டான். சந்தோஷத்துல திக்குமுக்காடிப் போன பேச்சி, சேர்மன் சாமிய தன் குலதெய்வமா கும்பிட ஆரம்பிச்சா. அவரு அருள் சக்தியக் கேள்விப்பட்ட சுத்துப்பட்டி மக்கள் என்ன நோயானாலும் இந்த மண்ணையும், ஊத்து நீரையும் எடுத்துட்டுப் போயி பூச ஆரம்பிச்சாங்க. இன்னும் அவர் நினைவா தம் பிள்ளைகளுக்கு சேர்மன், சேர்மக்கனி, சேர்மத்துரை, சேர்மச்சாமி, சேர்மத் தாயின்னு பேரு வைக்கறாக'ன்னு சொல்லி முடிச்சாரு இடாரக்குளம் அப்பரானந்தன்.

(தொடரும்)



ஏரல் சேர்மன் அருணாச்சலம் சாமி கோயில் திருநெல்வேலியில் இருந்து திருச்செந்தூர் செல்லும் பாதையில் உள்ள குரும்பூருக்கு வடக்கே சுமார் நான்கு மைல் தொலைவில் உள்ளது. தாமிரபரணி நதிக்கரையில், வயல்களும் சோலைகளும் சூழ்ந்த இயற்கை அழகு கொஞ்சும் இடத்தில் அமைந்துள்ளது. ஒவ்வொரு ஆண்டும் தை அமாவாசையை ஒட்டி ஒரு வார காலம் இக்கோயிலில் திருவிழா நடைபெறுகிறது.

சலுகை தொடர்கிறது.....

**கல்கி**யின் காலத்தால் அழியாத நாவல்கள்!

கையடக்கப் பதிப்பில்!! வர்த்தமானன் தயாரிப்பில் – மறுபதிப்பாக!!!

# பொன்னியின் செல்வன்

6 தொகுதிகள் 2728 பக்கங்கள் விலை ரூ. 240 சலுகை விலை ரூ. 215

2728 பக்கங்கள் **6 தொகுதிகள்** ரூ. **215** மட்டுமே!

| **சிவகாமியின் சபதம்** | **அலை ஓசை** | **பார்த்திபன் கனவு** |
|---|---|---|
| 4 தொகுதிகள் | 4 தொகுதிகள் | 1 தொகுதி |
| 1242 பக்கங்கள் | 1064 பக்கங்கள் | 424 பக்கங்கள் |
| விலை ரூ. 140 | விலை ரூ. 128 | விலை ரூ. 50 |
| சலுகை விலை ரூ. **125** | சலுகை விலை ரூ. **115** | சலுகை விலை ரூ. **45** |

சென்னையில் உள்ளோர் அனைத்து நூல்களையும் (15 தொகுதிகள்) ஒரே சமயத்தில் பெற 2436 4174 / 65 66 67 27 தொலைபேசியில் தொடர்பு கொள்க! நேரில், உங்கள் இல்லத்திற்கே பதினைந்து தொகுதிகளையும் கொண்டு வந்து தருகிறோம். ரூ. 500 மட்டும் ரொக்கமாகச் செலுத்தினால் போதுமானது.

இச்சலுகை 28.2.2007 வரை மட்டுமே!

நேரில் பெற

- *சென்னை* : வர்த்தமானன் ✆ : 24364174 / 65 66 67 27
- *கோவை* : விஜயா பதிப்பகம் ✆ : 2382614 / 2394614
- *சேலம்* : சந்திரா ✆ : 2265635
- *திருச்சி* : திருச்சி புக் ஹவுஸ் ✆ : 2764198 / 2766815
- *மதுரை* : செல்வி ✆ : 4380169 / 2343510
- *நெல்லை* : அருள் நந்தி சிவம் ✆ : 2339692 / 2338443
- *திருவண்ணாமலை* : ஸ்ரீ அருணா வரதன் ✆ : 250272 / 250431
- *காஞ்சிபுரம்* : குரு ✆ : 27260256
- *விழுப்புரம்* : சீதா ✆ : 225183 / 9865754879
- *புதுக்கோட்டை* : எஸ்.பி.எம். ✆ : 230035 / 9443531950
- *தஞ்சாவூர்* : அன்னம் ✆ : 279288 / 9443159371
- *தருமபுரி* : சதீஷ் ✆ : 268112
- *திண்டுக்கல்* : சக்தி ✆ : 2426069
- *பாண்டி* : சித்ரா ✆ : 2337309 / 2335133
- *கரூர்* : ஸ்ரீவாணி ✆ : 264291/ 9443941210

தபாலில் பெற

கடிதம் எழுதுக அல்லது 9544 - 2436 4174 / 9544 - 65 66 67 27 எண்ணில் தொடர்புகொண்டு முழுமுகவரியைத் தெரிவித்தால் போதும். நூலினை வி.பி.பி.யில் அனுப்புகிறோம். தனித்தனியாக தபால் மூலம் பெற பொன்னியின் செல்வன்; சிவகாமியின் சபதம்; அலை ஓசை; பார்த்திபன் கனவு நூல்களுக்கான தபால் மற்றும் கட்டுச் செலவு முறையே ரூ. 45, ரூ. 35, ரூ. 35, ரூ. 10 ஆகும்.

நான்கு நூல்களையும் ஒரே சமயத்தில் தபால் மூலம் பெறுவது மிகச் சிக்கனமானது. அதாவது நான்கு நூல்களின் நிகர விலை ரூ. 500 தபால் மற்றும் கட்டுச் செலவு ரூ. 70 சேர்த்து ரூ. 570 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறலாம்.




**வர்த்தமானன் பதிப்பகம்**

21, இராமகிருஷ்ணா தெரு, தியாகராய நகர், சென்னை -17.

(வடக்கு உஸ்மான் சாலை - விவேக் அன் கோ அருகில்; Kences Towers பக்கத்தில்)

போக்குவரத்து நெரிசல் இல்லாத, விசாலமான, கார் மற்றும் இருசக்கர வாகனங்கள் நிறுத்தும் வசதியுள்ள தெருவில் அமைகிறது வர்த்தமானன் பதிப்பகத்தின் புதிய விற்பனை நிலையம்

ஒரு பக்கக் கதை

எஸ்.சீதாராமன்

# அம்மு!



"இந்தக் கம்மல், மூக்குத்தி உனக்கு சூப்பரா இருக்குடி" என்று வியந்தார்கள் தோழிகள். சிறுமி அம்முவுக்குச் சந்தோஷம். நாலு மணி மஞ்சள் வெயிலில் தலையை அப்படியும், இப்படியும் ஆட்டித் தரையில் விழுந்த நிழலைக் கண்டு ரசித்தாள்... மகிழ்ந்தாள்....

கூடை புல்லை இடுப்பில் வைத்துக்கொண்டு அந்தப் பக்கமாக வந்த நாகம்மாள் கிழவி நின்று அம்முவையே உற்றுப் பார்த்தாள்.

"இன்னா பாட்டி, அப்பிடிப் பாக்கறீங்க?"

"எந்தக் கடையில் வாங்கினதுடி இந்தக் கம்மலும், மூக்குத்தியும்?"

"திண்டிவனம் மருவு சேட்டுக்கிட்டதான்."

"அம்சமா இருக்கு."

வாசலில் நீர் தெளித்துப் பெருக்கிக் கொண்டிருந்த அம்முவின் அம்மா பச்சையம்மாளைப் பார்த்ததும் வீதியிலேயே நின்ற கிழவி, "பச்சம்மா, உன் பொண்ணு அம்மு வந்ததும் சுத்திப்போடுடி" என்றாள்.

"எதுக்குக் கிழவி?"

"அவ போட்டிருக்கற கம்மல், மூக்குத்தி ஜோரா இருக்கு."

பல மாசமா கேட்டுட்டு இருந்தாளே... இங்கதான் ஜான் ஏறினா, மொழம் வழுக்குதே... அப்புறம் எப்பிடி நக, நட்டு எடுக்கறது? எங்கயாவது திருடி இருப்பாளோ?

பயம் அதிகரிக்க ஓடினாள் அந்தத் தாய். அங்கே அம்முவைப் பார்த்ததும் அவளுக்கு அழுகை வந்துவிட்டது.

தான் குழம்புக்கு அரிந்த வெண்டைக்காய் அடிகளை கம்மல், மூக்குத்தியாக ஒட்டவைத்திருந்தாள் அம்மு! ●

# பத்துப் பாட்டு... குத்துப் பாட்டு...



# வியக்க வைக்கும் வீச்சு!

**வளர்பிறை - இரவீந்திரநாத் தாகூர் - தமிழாக்கம்: கவிஞர் இளவல் ஹரிஹரன், கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17, 136 பக்கங்கள். விலை ரூ.45/-**

எழுச்சிக் கவிஞர் இரவீந்திரநாத தாகூரின் நாற்பது கவிதைகளின் அணிவரிசை. கவிஞர் இளவல் ஹரிஹரன் சிறப்பாக மொழி பெயர்த்துள்ளார். வீடு, தேவதையின் பூமி, மல்லிகைப் பூ, வியாபாரி எனப் பல்வேறு விஷயங்கள் பற்றி தேசியக் கவிஞரின் பார்வை விரிகிறது.

**பாரதத்தை மேம்படுத்திய பல்துறைச் சான்றோர்கள் - வி.கே. சுப்பிரமணியன், தமிழாக்கம்: சுங்காசுதன், வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17. 220 பக்கங்கள். விலை ரூ.70/-**

இந்தியாவை ஆண்ட பல்வேறு அரசர்களில் தொடங்கி சமூக சீர்திருத்தவாதிகள், பொது வாழ்வில் ஈடுபட்டவர்கள், இலக்கியச் சாதனையாளர்கள், பல்துறை வல்லுநர்களென நூறு பேரைப் பற்றி சுருக்கமாக எடுத்துச் சொல்லும் நூல். மாணவர்களுக்குப் பயனளிக்கும் நூலாக இருக்கும்.

**கண்ணொளி தரும் கண்கண்ட தெய்வங்கள் - மயன் - ஸ்ரீ ஆனந்த நிலையம், 29/5 ரங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை - 17. 104 பக்கங்கள். விலை ரூ.50/-**

பல்வேறு ஊர்களிலுள்ள கோயில்களின் வரலாறு, சிறப்புகளைச் சொல்லும் நூல். எல்லாவற்றுக்கும் உள்ள ஓர் ஒற்றுமை கண். நாம் நன்கு அறிந்த கண்ணப்பர் வரலாற்றைப் போல் ஒவ்வொரு தலத்துக்கும் கண்கள் சம்பந்தமான வரலாறு சொல்லப்பட்டுள்ளது.

**கரிசல் காட்டுக் காதல் கதைகள் - பாரத தேவி - விகடன் பிரசுரம் வெளியீடு. 96 பக்கங்கள், விலை ரூ.45/-**

ஒவ்வொரு கதையிலும் கரிசல் நிலத்தின் வாசம் வீசுகிறது. நூலாசிரியர் ஐந்தாம் வகுப்பு வரையே படித்தவராம். நம்ப முடியவில்லை. கதைகளில் உள்ள ஆழமும், வீச்சும் வியக்கச் செய்கின்றன.





# NAVAJEEVAN ORPHANAGE

(Matha Shisu Sahaya Kendram - Unit of NBRC)
Tiruchanoor, Tirupati - 517503. (A.P)
Ph : 0877 - 2239992

## உதவிகள் வழங்கப்படுகிறது

திருப்பதி புண்ய க்ஷேத்திரத்திலிருந்து கடந்த 27 வருஷமாக நவஜீவன் சேவா ட்ரஸ்ட், நூற்றுக் கணக்கான பார்வையற்ற குழந்தைகள், ஆதரவற்ற முதியோர்கள், மற்றும் பார்வை குறைந்தவர்களுக்கு, பல விதங்களிலும் உதவி வருகிறது.

## நவஜீவன் ஆதரவற்ற குழந்தைகள் காப்பகம்

மேற்குறிப்பிட்ட இலவசத் தொண்டுகளுடன் திருப்பதி - திருச்சானூர் கோயில் அருகில் விரைவில் நவஜீவன் ஆதரவற்ற குழந்தைகள் காப்பகம் துவங்க உத்தேசிக்கப்பட்டுள்ளது.

## இலவச அனுமதிக்கான தகுதிகள்

1. தாய் அல்லது தந்தை இருவரில் ஒருவரை இழந்த ஆதரவற்ற ஏழைக் குழந்தை.
2. கணவரால் கைவிடப்பட்டு குழந்தையுடன் ஆதரவற்ற நிலையில் உள்ள ஏழைத்தாய் மற்றும் குழந்தை.
3. AIDS - எய்ட்ஸ் HIV - பாஸிடிவ் நோயினால் பாதிக்கப்பட்டு குழந்தையைக் காப்பாற்ற இயலாத நிலையில் உள்ள ஏழைக்குடும்பத்தைச் சேர்ந்த தாய் மற்றும் குழந்தை.
4. வயது வரம்பு : பிறந்து ஒருமாதம் முதல் ஐந்து வயது வரை.

## நிரந்தர பராமரிப்பு

மேற்படி ஆதரவற்ற ஏழைக்குழந்தைகளுக்கு திருப்பதி நவஜீவன் மாதா சிசு - ஸஹாய குழந்தைகள் காப்பகத்தில் சுகாதாரமான சூழ்நிலையில் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம், மருத்துவ வசதி, மற்றும் அடிப்படைக் கல்வி வழங்கப்படும்.

## சமூக நல பெண் தொண்டர்கள் தேவை

திருப்பதி நவஜீவன் குழந்தைகள் காப்பகத்தில் தாயன்புடன் சேவை செய்ய, தமிழ் அறிந்த, பெண் தொண்டர்கள் தேவை.

குறிப்பு :-

குழந்தையுடன் தேர்வு இன்டர்வ்யூவின் பொருட்டு திருப்பதிக்கு வருகைதரும் நபருக்கு ரயில் பஸ் சார்ஜும் வழங்கப்படும். மேலும் விவரங்களுக்கு மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு 28.02.07க்குள் விண்ணப்பிக்கவும், தொடர்பு கொள்ளவும்.

**நவஜீவன்-மாதா சிசு ஸஹாய கேந்திரம்**
திருச்சானூர், திருப்பதி-3.

நாராயண சேவையில்,
ஸ்வாமி ஸ்ரீதர் ஆசார்ய,
பிரசிடெண்ட்

முதல் படத்திலேயே டைரக்டருடன் மோதல் என்பது கொஞ்சம் ஓவர்தான். சரி, ஏன் அப்படிச் செய்தேன்? சினிமா குடும்பத்தில் பிறந்ததால், சிறு வயதிலிருந்தே நிறைய படங்கள் பார்க்கிற வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. எந்த ஒரு படத்தைப் பார்க்கும்போதும், அதில் இன்ன விஷயம் நன்றாக இருக்கிறது; இது சரி இல்லை; இதை இப்படிச் செய்திருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்கும் என்றெல்லாம் விமர்சனம் செய்யும் பழக்கம் எனக்கு வந்து விட்டது. மல்டி மீடியா, அனிமேஷன் கோர்ஸ்கள் படித்த பிறகு, சினிமாவைத் தொழில் நுட்ப ரீதியாகவும் நான் பார்க்க ஆரம்பித்தேன்.

நானே ஒரு நடிகனாகிவிட, டைரக்டர் காட்சிகளை விளக்கிச் சொல்லும்போது, அவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டு, அதன் பிறகு, 'இந்தக் காட்சியில் அப்படி எதற்காக நடிக்க வேண்டும்? இப்படிச் செய்தாலே போதாதா? அல்லது இந்த இடத்தில் இப்படிச் செய்தால் நன்றாக இருக்குமே!' என்றெல்லாம் டைரக்டருக்கு ஆலோசனைகள் சொல்லத் தொடங்கினேன். உதாரணமாக, ஒரு காட்சியில் நான் அழ வேண்டும் என்று டைரக்டர் சொன்னால், நான் "சும்மா லைட்டா அழுகிறேன்; பொம்பளை மாதிரி சீரியஸாக அழுதால் அசிங்கமாக இருக்கும். இந்த சீன்ல இப்படி அழ வேணாமே!' என்பேன். அங்கேதான் பிரச்னை ஆரம்பித்தது. சில சமயங்களில் டைரக்டர் நான் சொல்வதைக் கண்டு கொள்ளாமல் இருந்து விடுவார். அவ்வப்போது தான் சொல்வதைச் செய்தால் போதும் என்பார். இன்னும் சில சமயங்களில் "இங்கே நான்தான் டைரக்டர்!" என்று அழுத்தமாகச் சொல்வார்.

வெகு அபூர்வமாக நான் சொல்லும் ஆலோசனைகளை அவர் ஏற்றுக் கொண்டதும் உண்டென் பதையும் நான் சொல்லத் தான் வேண்டும். இதன்




• படம் : பொள்ளாச்சி சுந்தரம்

காரணமாக எங்கள் இரண்டு பேருக்கும் இடையில் அவ்வப்போது ஈகோ மோதல்கள் ஏற்பட்ட வண்ணமிருந்தன.

ஒரு வழியாக படம் முடிந்தது. உடனே ஒரு புதிய பிரச்னை முளைத்தது. மூன்றரை மணி நேரம் ஓடும் அளவுக்குப் படம் நீளமாக இருந்தது. இன்று யார் மூன்று மணி நேரம் உட்கார்ந்து படம் பார்ப்பார்கள்? எனவே, படத்தின் நீளத்தைக் குறைத்தே ஆக வேண்டும். எந்தக் காட்சியை வெட்டுவது என்பதிலும் எனக்கும் டைரக்டருக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. ஒரு குறிப்பிட்ட காட்சியைப் பற்றி நான் சொல்லியே ஆக வேண்டும்.

ஒரு காட்சியில் நான் பார்வையற்றவனாக நடித்தேன். அந்தக் காட்சியில் நான் மிகவும் சிரத்தை எடுத்து நடிக்க வேண்டி இருந்தது. சென்னை நகரின் பல இடங்களில் அந்தக் காட்சியைப் படம் பிடிக்க மூன்று நாட்கள் ஆயின. எடிட்டிங்கின் போது, டைரக்டர் அந்தக் காட்சியைத் தூக்கி விடலாம் என்று சொன்னபோது, நான் மனம் ஒடிந்து போனேன். "எவ்வளவு கஷ்டப்பட்டு அந்த சீன்ல நான் நடிச்சேன்; எவ்வளவு நேரமும், பணமும் அதற்காக செலவழித்திருக்கிறோம். இப்போ அந்த சீனை வெட்டிடலாம்னா என்ன அர்த்தம்?'' என்று சண்டை போட்டேன். ''வேற வழியே இல்லை. எந்தெந்த சீன்களை வெட்டினால் கதைக்குப் பாதிப்பு இருக்காதோ, அதையெல்லாம் தான் வெட்ட முடியும். நீங்க ரொம்ப நல்லா நடிச்சிருக்கீங்க. ஆனாலும், அந்த சீனை வெட்டித்தான் ஆகணும்'' என்று நிலைமையை விளக்கினார் டைரக்டர். என் அறிவு அதை ஏற்றாலும் மனசு ஒப்புக்கொள்ள மறுத்தது.

# மறக்க முடியாத வெள்ளிக்கிழமை!

**ப**டம் சென்சார் ஆகி ரிலீசுக்குத் தயாரானது. 'ஆசை ஆசையாய்' எனக்கு அறிமுகப் படம். எங்கள் சூப்பர் குட் ஃபிலிம்ஸுக்கு ஐம்பதாவது படம்; எனக்கு சூப்பர் குட் பிலிம்ஸ் தயாரித்த படங்களின் விளம்பரங்களை வடிவமைத்த அனுபவம் உண்டு என்பதால், 'ஆசை ஆசையாய்' படத்தின் பத்திரிகை விளம்பரங்கள் பளிச்சென்று புதுமையாக இருக்க வேண்டும் என்று விரும்பினேன்.

## இயக்குநர் திலீபன்!

திடீரென்று காமெடியனாக வருவார்... தடாலென்று டி.விக்குத் தாவிவிடுவார்.... இதுதான் சின்னி ஜெயந்த். எல்லோரும் வியக்கும் வண்ணம் ஒரு காரியமும் செய்தார் - அது, அவர் இயக்கிய 'உனக்காக' திரைப்படம். டைரக்ஷனை மறந்திருந்தவர், இப்போது மறுபடியும் கோதாவில் இறங்கி விட்டார். இந்த முறை ரித்திஷ், மனிஷா என்னும் புதுமுகங்களை நம்பிக் களத்தில் குதிக்கிறார். 'கானல் நீர்'- இதுதான் படத்தின் பெயர். அண்மையில் இப்படத்தின் இசை வெளியீட்டு விழாவில் ஏக தடபுடல். எங்கு பார்த்தாலும் கட்சிக் கரை வேட்டிகள். விஷயம் இதுதான்: நாயகன் ரித்திஷ், தமிழக அமைச்சர் ஒருவரின் பேரனாம்!



- லைட்பாய்

அதற்காக ஐதராபாத்தைச் சேர்ந்த என் புகைப்பட நண்பர் கிரணின் உதவியை நாடினேன். என் அப்பா, அம்மா மற்றும் படத்தின் ஹீரோயினுடன் ஐதராபாத் சென்றேன். அங்கே நானும், ஹீரோயினும் பிரத்யேகமான புகைப்படங்கள் எடுத்துக் கொண்டோம். அந்த ஃபோட்டோக்கள் மிகப் பிரமாதமாக இருந்தன. அதை பற்றி அறிந்த டைரக்டர், "அதெப்படி என்னிடம் சொல்லாமல் ஐதராபாத் போய் ஸ்டில்ஸ் எடுக்கலாம்?" என்று கோபித்துக் கொண்டார். படத்தின் பப்ளிசிட்டி நல்லா இருக்கணும் என்பதற்காகத்தானே அப்படிச் செய்தேன். "உங்களுக்குத் தெரியாமல் ரகசியமாகச் செய்ய வேண்டும் என்பது என்னுடைய நோக்கமில்லை" என்று அவரிடம் விளக்கினேன். அதன்பின், ஐதராபாத்தில் எடுக்கப்பட்ட புகைப்படங்களைக் கொண்டு நான் வடிவமைத்த விளம்பரங்களை டைரக்டர் மிகவும் பாராட்டினார்.

ஆர்.பி.சௌத்ரியின் மகன் ஹீரோவாக அறிமுகமாகிற படம் என்பதால் திரையுலக வட்டாரத்தில் படத்துக்கு ஓர் எதிர்பார்ப்பு இருந்தது. என் முதல் படம் வெளியான வெள்ளிக் கிழமையை என்னால் மறக்க முடியாது. என் நண்பர்கள் சிலரை அழைத்துக் கொண்டு, சத்யம் தியேட்டரில் முதல் நாள் முதல் காட்சி பார்க்கப் போனேன். நான் பொதுவாகவே 'டென்ஷன் பார்ட்டி' இல்லை என்றாலும் அந்த நேரம் இலேசான டென்ஷன் இருக்கவே செய்தது. என் பெயர் திரையில் வந்தபோதும், நான் அறிமுகமாகும் காட்சியிலும் நண்பர்கள் கைத்தட்டி, கூக்குரல் எழுப்பினார்கள்.

படத்தில் என்னுடைய நடிப்பு எனக்குத் திருப்திகரமாக இருந்தாலும் கூட, ஒட்டுமொத்தமாகப் பார்க்கிறபோது, படம் 'ஓகோ' என்று பாராட்டும்படியாக இல்லை என்றுதான் தோன்றியது. என் அப்பாவும் அப்படித்தான் அபிப்ராயம் கூறினார். நண்பர்கள், "முதல் பாதியில் இருந்த விறுவிறுப்பு, இரண்டாவது பாதியில் இல்லை" என்றார்கள்.

வழக்கமாக, ஒரு புதுமுகம் நடிக்கிற படம் ரிலீஸ் ஆகி, அதன் வெற்றியின் அடிப்படையில்தான் அவருக்கு அடுத்த பட வாய்ப்பு வரும். ஆனால் நான் அதிர்ஷ்டசாலி. என் முதல் படம் வெளியாகாத சமயத்தில், என்னுடைய இரண்டாவது படத்தின் படப்பிடிப்பு பாதி முடிந்து விட்டது. அது எப்படி சாத்தியமானது?

(பேசுவேன்)

# கர்மப் பிடியிலிருந்து விலகிட...

ஒரு விறகுக் கட்டு இருந்து. அதைச் சுற்றிப் போட்ட கயிற்றுக் கட்டு முடிச்சு அவிழ்க்க முடியாமல் ஆனால், என்ன செய்வார்கள் தெரியுமா? கட்டு தளர்வதற்கு முதலில் கட்டிய கயிற்றைவிட இறுக்கமாக அதை இன்னொரு கட்டுப் போட்ட மாதிரி சுற்றி நெருக்கிப் பிடித்துக் கொள்வார்கள். 'கட்டுப் போட்ட மாதிரி' தானே ஒழிய, முடிச்சுப் போட்டுக் கட்டியே விடமாட்டார்கள். இந்த இறுக்கத்தில், முதலில் முடிச்சுப் போட்டுக் கட்டின கட்டு லூஸாகிவிடும். அதை எடுத்துப் போட்டு விடலாம். அப்புறம், கட்டின மாதிரி, ஆனால் கட்டியே விடாமல் சுற்றியிருக்கிற இன்னொரு கயிற்றையும் எடுத்துவிட்டால் விறகுகள் கட்டற்று விடுபட்டுவிடும். இதே மாதிரி மனஸின் அலைபாய்தலால் பல தினுஸான காரியங்களால் மணி முடிச்சாகக் கட்டுப்போட்டுக்கொண்டு சம்ஸார பந்தத்தில் கிடக்கிற நாமும் அதிலிருந்து விடுபட, "சாஸ்த்ர கர்மா" என்று கட்டு மாதிரி உள்ளதைப் போட்டுக்கொள்ள வேண்டும். கன்னாபின்னா கட்டாக இல்லாமல் சாஸ்த்ர மூலமாக ரிஷிகள் ஒவ்வொருவருக்கும் ஸ்வதர்ம (அவரவருக்கென ஏற்பட்ட நித்ய கடமைகள்) ரூபமாக அநேக காரியங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ரிஷிகளின் மூலமாக ஈஸ்வரனே போட்ட ரூல்கள் இவை.



நம் சொந்த ஆசையின் மேலே கன்னாபின்னா என்று காரியங்கள் பண்ணிப் பண்ணி முடிச்சாகப் போட்டுக் கொண்டிருக்கிற கட்டு தளர்வதற்கு இந்த ஸ்வதர்ம கர்மம் கட்டுதான் உதவி புரிவது. இது அசல் கட்டு அல்ல; கட்டு மாதிரி நெரிக்கும். ஆனாலும் இதிலே நெரிபடுவது நம்முடைய தப்பான ஆசைகள்தான். நம்மை நல்லதில் விடுவிப்பதற்கே இந்த நெரிப்பு. இதைப் புரிந்துகொண்டால் சாஸ்த்ர கர்மாக்களை ரூல்கள் கொஞ்சங் கூடத் தப்பாமல் சந்தோஷமாகச் செய்து கொண்டே போகலாம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

• பாவனா



# யாரோடு எனக்குக் காதல்...

வெற்றிப் படிக்கட்டுகளில் வேகமாய் ஏறிக்கொண்டிருக்கும் பரத்தை சற்று நிறுத்திப் பேசினோம்...

**சிம்பு, தனுஷ், விஷால்னு சினிமா பின்னணியோடு உலா வர்றவங்க மத்தியில காலம் தள்றது கஷ்டமா இருக்கா?**

"தமிழ் ரசிகர்கள் மேல என்னைக்கும் எனக்கு நம்பிக்கையிருக்கு. யாரு, என்னன்னு பார்க்கறதைவிட திறமைக்கு மதிப்புக் கொடுக்கறவங்க. அதுக்கு சிறந்த உதாரணம் அஜித். அவர்தான் என்னோட இன்ஸ்பிரேஷன். அதனால கஷ்டம்ங்கற வார்த்தைக்கே இங்கே இடமில்லை!"

**கெட்டப் மாத்தி நடிக்கறதுல விருப்பமில்லையா?**

"ஒவ்வொரு படத்துக்கும் ஒவ்வொரு விதமாத்தான் நடிக்கிறேன். 'காதல்'ல அழுக்கு மெக்கானிக்... 'எம்டன் மகன்'ல அப்பாவுக்கு பயந்து நடுங்கறவன்... 'வெயில்'ல பாசத்துக்கு உருகறவன்... இப்போ 'கூடல் நகர்'ல இன்னொரு வித்தியாசமான கேரக்டர்னு அப்படியே போயிக்கிட்டு இருக்கேன்!".

**நீங்க நடிக்க ஆசைப்படுற இயக்குநர்கள் லிஸ்ட் சொல்ல முடியுமா?**

"கதையைக் கேட்காமலேயே நம்பி நடிக்கிறது என்னோட குரு ஷங்கர் சாரோட படத்துலதான். தரணி, லிங்குசாமி இவங்க கூடவெல்லாம் ஒர்க் பண்ணணும்னு ஆசையிருக்கு."

**கூடல் நகர் பத்திச் சொல்லுங்க?**

"இதுவரைக்கும் என்னோட படங்கள் எதுவும் என்னை முன்னிறுத்திப் பேசினதில்ல. கதைதான்



• ஜெனிலியா



ஹீரோ. இந்தப் படமும் அப்படித்தான். முதல் முறையா டபுள் ரோல் பண்றேன்."

**பரத் - ஜெனிலியா, சந்தியா, பாவனா... யாரோடுதான் உங்க காதல்?**

"சினிமாவுலன்னா மூணு பேரோடை யும்தான். நிஜத்துல எல்லாருமே எனக்கு நல்ல நண்பிகள். கிசுகிசுக்கள் மேகம் மாதிரி... வரும், போகும். இதுக்கெல்லாம் கவலைப்பட்டா சினிமாவுல ஜெயிக்க முடியாது."

**புது இயக்குநர்களைக் கண்டா மிரண்டு ஓடுறீங்களாமே...?**

"நாலு பேர் கதை சொல்ல வந்தா ரெண்டு பேர்கிட்டதான் கதை கேட்க முடியும். எல்லார்கிட்டேயும் கதை கேட்கறதுக்கு நமக்கு நேரமுமில்ல. சிலர் ஒரு படத்துலகூட முழுசா ஒர்க் பண்ணியிருக்க மாட்டாங்க. உடனே கதை சொல்றேன்னு கிளம்பி வந்துடுவாங்க. இப்படி ஒரு சிலர் கிளப்பி விடுற வதந்திதான் நமக்கு பாதிப்பை ஏற்படுத்துது. நல்ல கதைகளை நான் என்னிக்கும் நிராகரிச்சதில்ல."

**நீங்க ரொம்ப எதிர்பார்த்த 'சென்னைக் காதல்' சரியாப் போகலையே...?**

" 'வெயில்' நல்லாப் போகுதே... எல்லாம் சரியா வரணும்னுதான் பண்றோம். சில சமயம் மிஸ்ஸாயிடுது. அதுக்காக உழைச்சதை குறை சொல்ல முடியாது. எல்லாருடைய பங்களிப்பும் மகத்தானது."

**உங்க வளர்ச்சியை திரும்பிப் பார்க்கும்போது எப்படி உணர்றீங்க?**

"பெருமையா இருக்கு. 'பாய்ஸ்' பண்ணும்போது நான் ஒண்ணுமே இல்ல. இன்னைக்கு தமிழ் ரசிகர்கள் எனக் குத் தனியிடம் தந்திருக்காங்கன்னா அதுக்கு அவங்களுக்கு என்ன கைமாறு செய்யப் போறேன்? நல்ல படங்கள் பண்ணி அவங்கள மகிழ்ச்சிப்படுத்தறதைத் தவிர!"

**- விக்டர் மனோ**

**படம் : பொள்ளாச்சி சுந்தரம்**



• சந்தியா

**மேஷம்:** நற்பலன் நிறைந்த வாரம். தனம், குடும்பம், கல்வி, வாக்கு மேல் ஓங்கும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். உத்தியோகத்தில் இட மாற்றம் ஏற்படும். வீடு / வாகனம் வாங்க நேரிடும். நண்பர்கள், உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குரு / ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர, நற்பலன் மிகுதி ஆகும்.

**ரிஷபம்:** பொன்னான வாரம். பணக் கஷ்டம் இருக்காது. வீடு / மனை / வாங்க ஏற்ற தருணம். கல்வி வளம் மேலோங்கும். குழந்தை பாக்கியம் கிட்டும். உத்தியோகத்தில் ஊதிய உயர்வு ஏற்படும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். கொடுக்கல் வாங்கல் நற்பலனைத் தரும். வியாபாரத்தில் நல்ல அனுகூலம் ஏற்படும். ராகு / கேது வழிபாடு செய்து வர, நற்பலன் பெருகும்.

**மிதுனம்:** முயற்சி செய்யும் காரியம் வெற்றி அளிக்கும். தெய்வபலம் மிகுந்த வாரம். மறைமுக எதிர்ப்பு இருக்கும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். திருமணம் காரியம் கைகூடும். உத்தியோகத்தில் நல்ல பலன் ஏற்படும். சனி / குரு வழிபாடு செய்துவர, நற்பலன் கிட்டும்.

**கடகம்:** வீடு / மனை வாங்க ஏற்ற வாரம். திருமணம் கைகூடும். படிப்பில் கவனம் செலுத்தவும். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். வேலைப்பளு அதிகரிக்கும். ஊதிய உயர்வு கிட்டும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை அவசியம். வியாபாரத்தில் முன்னேற்றம் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**சிம்மம்:** தடைகள் விலகி, நற்பலனை அடையும் வாரம். திருமண நிகழ்ச்சி கை கொடுக்கும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். வெளியூர் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். வீடு விற்பனை ஆகும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கன்னி:** மகிழ்ச்சிகரமான வாரம். பொன், பொருள் சேர்க்கை ஏற்படும். வெளியூர் அழைப்புகள் வந்து சேரும். சுபகாரிய பேச்சு பலன் கொடுக்கும். வீடு / மனை வாங்க நல்ல காலம். லக்ஷ்மி கடாக்ஷம் கிட்டும். குரு வழிபாடு செய்து வர, நற்பலனை அடையலாம்.

**துலாம்:** தன வருவாய் பெருகும். வீடு / மனை மூலம் ஆதாயம் கிட்டும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். நீண்ட தூர பிரயாண, வாய்ப்பு வந்து சேரும். குழந்தைகள் வழியில் மன சந்தோஷம் கிட்டும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும்.

# பரத்வாஜ் பதில்கள்

**• என் மகனுக்கு விவாகம் எப்போது நடக்கும்? பதவி உயர்வு எப்போது கிடைக்கும்?**

**- வே.நாராயமூர்த்தி, திருப்பத்தூர்**

தங்கள் மகனுக்கு 20.11.2006 முதல் நல்ல காலம் துவங்கி உள்ளது. 2007-ல் பதவி உயர்வு கிடைக்கும்; திருமணம் நடக்கும். உடன் பிறப்பு இருவர் உள்ள இடத்திலிருந்து வரன் அமையும்.

**• என் மகனுக்குப் பொருத்தமான வரன் எப்போது அமையும்?**

**- டி.சௌந்தரராஜன், சென்னை - 92**

உங்கள் பையனுக்கு 38 வயது வரை சந்திரதசை நடைபெற்றதால் வாழ்க்கையே ஏமாற்றத்தை அளித்து இருக்கிறது. சர்ப்ப தோஷம் உள்ள ஜாதகத்தை சேர்க்கவும். 2007-ல் வரன் கூடும்.

# தஞ்சை பரத்வாஜ்

ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**விருச்சிகம்:** செல்வாக்கு மிகுந்த வாரம். வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். வீடு / மனை வாங்க நல்ல நேரம். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். திருமணக் காரியம் கை கூடும். கல்வி வளம் மேலோங்கும். மனக் குழப் பம் தீரும். நீண்டகால நிலுவைகள் கைக்கு வந்து சேரும். ராகு / கேது / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**தனுசு:** மனமகிழ்ச்சி ஏற்படும் வாரம். திருமணக் காரியம் கைகூடும். கல்வி வளம் மேலோங்கும். நீண்ட கால கடன் தொல்லை நீங்கிவிடும். வேலையில் இட மாற்றம் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சனி / குரு வழி பாடு செய்துவர, நற்பலனை அளிக்கும்.

**மகரம்:** மேன்மையான வாரம். வாக்கு

படிப்பில் கவனம் செலுத்தவும். வியா பாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வீடு / மனை வாங்க நல்ல காலம் இது. ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர, நற்பலனைத் தரும்.

**கும்பம்:** எதிர்ப்புகள் குறைந்து நற் பலன் பெருகும் வாரம். வராத நிலுவை கள் வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். வெளியூர்ப் பிர யாண வாய்ப்பு வந்து சேரும். திருமணக் காரியம் கைகூடும். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** மிகவும் அதிர்ஷ்டகரமான வாரம். வீடு / மனை வாங்க நல்ல தருணம். தூரதேச பிரயாண வாய்ப்பு வந்து சேரும். குழந்தை பாக்கியம் உண்டாகும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். ஆடம்பரப் பொருட்கள் சேரும். வெளி நாட்டு வியாபாரம் நன்றாக இருக்கும். மனச்சலனம் விலகும். ஆஞ்ச நேயரை வழிபாடு செய்து வர நற்பலன் ஏற்படும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

## 4.2.2007 முதல் 10.2:2007 வரை

வன்மை மேலோங்கும். வாக்கு வாதத் தைத் தவிர்க்கவும். இட மாற்றம் ஏற் படும். கொடுக்கல் வாங்கலில் எச் சரிக்கை தேவை. திருமணக் காரியம் கைகூடும். மனச் சலனம் விலகும்.





# 5

'கம்ப்யூட்டர் வாடகைக்காக நயா பைசா செலவழிக்க வேண்டியதில்லை' என்று பில் கேட்ஸ் சொன்னதுமே 'கம்ப்யூட்டர் சென்டர் கார்ப்பரேஷன்' என்ற அந்த கம்பெனியைச் சேர்ந்தவர்களின் முகத்தில் ஈயாடவில்லை. கணினி வாடகையைச் சேமிப்பதற்கு இப்படியும் ஒரு குறுக்கு வழியா என்று அசந்து போனார்கள்.

அதன்பின் அந்த நிறுவனத்தில் பில் கேட்ஸுக்கும் அவருடைய நண்பர்களுக்கும் ராஜ மரியாதைதான். நினைத்த போதெல்லாம் அங்கே சென்று பிரச்னையைக் கண்டுபிடிக்கிறேன் என்ற போர்வையில், கணினியோடு விளையாடிப் பழகினார்கள். பல முக்கியமான கம்ப்யூட்டர் மொழிகளையும், கணினி இயங்குகிற விதத்தையும் பில் கேட்ஸ் நன்றாகக் கற்றுக்கொண்டது அங்கேதான்.

இதன் மூலம், கேட்ஸின் கம்ப்யூட்டர் ஆர்வமும், அனுபவமும் படிப்படியாக அதிகரித்துக் கொண்டிருக்கையில், திடுதிப்பென்று ஒரு நாள் சிசிசி நிறுவனம் பெரிய அளவில் நஷ்டத்தைச் சந்தித்து, நொடித்துப் போய்விட்டது.

இத்தனை நாட்களாக, பில் கேட்ஸ் தோழர்கள் பயன்படுத்திப் பழகிய அதே வகைக் கணினியை வைத்திருந்த இன்னொரு நிறுவனம், அவர்களை அழைத்தது. சம்பளப் பட்டியல் தயாரிப்பதற்கான ஒரு புதிய மென்பொருள் (சாஃப்ட்வேர்) எழுதித் தரும்படி கேட்டுக் கொண்டது.

அதற்கு முன், அவர்களுக்குத் தொழில் முறையில் சாஃப்ட்வேர் எழுதிப் பழக்கமில்லை. என்றாலும், நம்பிக்கையுடன் பில் கேட்ஸும் அவருடைய நண்பர்

என்.சொக்கன்

# மைக்ரோ சாஃப்ட் பிறந்த கதை!

களும் உடனடியாகச் செயலில் இறங்கினார்கள்.

அதன் தொடர்ச்சியாக பள்ளிகளுக்குக் கால அட்டவணை தயாரிப்பது, சாலைகளில் போக்குவரத்தை அலசுவது போன்ற பல விஷயங்களுக்கு சாஃப்ட்வேர் எழுதிச் சம்பாதித்தார்கள். பின்னர், அவர்களே கம்ப்யூட்டர்களைச் செய்து, அதற்குத் தேவையான மென்பொருள்களையும் எழுதி, மொத்தமாக விற்றார்கள்.

தமது பள்ளிப் படிப்பை 1973-ல் முடித்த பில் கேட்ஸ், ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் சேர்ந்தார். அப்போதும், அவருக்குத் தமது எதிர்காலத்தைப் பற்றிய நிச்சயமான திட்டம் எதுவும் இல்லை. ஒழுங்காக வகுப்புகளுக்குச் செல்லாமல் ஊர் சுற்றுவது, விளையாடுவது என்றுதான் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தார்.

இந்தக் காலகட்டத்தில், பில் கேட்ஸின் வாழ்க்கையில் மிக முக்கியமான திருப்புமுனை நிகழ்ந்தது. அதற்குக் காரண கர்த்தாவாக அமைந்தவர், பால் ஆலென்.

பள்ளிக் காலத்திலிருந்தே கேட்ஸின் நெருங்கிய தோழர் பால் ஆலென். பள்ளிப் படிப்பை முடித்த பிறகு வாஷிங்டன் பல்கலைக்கழகத்தில் மேற் படிப்புக்காகச் சேர்ந்திருந்தார் ஆலென். ஆனால், அவரால் தன்னுடைய நெருங்கிய சிநேகிதர் பில் கேட்ஸை நெடுநாள் பிரிந்திருக்க முடியவில்லை.

இதனால், அவர் தன்னுடைய கல்லூரிப் படிப்பைப் பாதியில் நிறுத்திவிட்டு, 'ஹனிவெல்' என்ற நிறுவனத்தில் வேலைக்குச் சேர்ந்திருந்தார். அதன்பிறகு, அவரும் பில் கேட்ஸும் அடிக்கடி சந்தித்துப் பேசிக்கொள்ள முடிந்தது.

எலக்ட்ரானிக்ஸ் பிரியரான பால் ஆலென், அந்தத் துறையில் அவ்வப்போது அறிமுகமாகும் புதிய தொழில்நுட்பங்களைப் பற்றி ஆர்வத்தோடு படித்துத் தெரிந்துகொள்வது வழக்கம். அப்போது அவர் கண்ணில்பட்ட ஒரு நவீன கணினி, 'அல்டெய்ர்.'

'மைக்ரோ கம்ப்யூட்டர்' என்ற வகையைச் சேர்ந்த இந்தப் புதிய கணினியைப் பற்றிப் படித்து, அதில் என்னென்னவெல்லாம் சாத்தியம் என்கிற விவரங்களை அறிந்துகொண்டதும், உடனடியாக அதைப் பயன்படுத்திப் பார்க்க வேண்டும் என்கிற குறுகுறுப்பு பால் ஆலெனுக்குத் தோன்றிவிட்டது. இந்த விஷயத்தைக் கேள்விப்பட்டதும், பில் கேட்ஸும் மகா உற்சாகமாகிவிட்டார்.

அதுவரை வெளியாகியிருந்த மற்ற கணினிகளோடு ஒப்பிடுகையில், அல்டெய்ரின் விலை குறைவு. இதனால், ஏராளமானவர்கள் இந்தக் கணினியை வாங்கிப் பயன்படுத்துவார்கள் என்ற கணிப்பில் இந்த வாய்ப்பை இறுகப் பற்றிக்கொண்டாக வேண்டும் என்று தீர்மானித்தார்கள் பில் கேட்ஸும், பால் ஆலெனும்.

இதற்காக அவர்கள் இருவரும் அல்டெய்ர் கணினிக்குத் தேவையான மென்பொருள்களை எழுதும் நோக்கத்தில் அந்தக் கணினியைத் தயாரித்திருந்த எம்.ஐ.டி.எஸ். என்ற நிறுவனத்துக்குக் கடிதம் ஒன்று எழுதினார்கள்.

எம்.ஐ.டி.எஸ். நிறுவனத்தைத் தொலைபேசியில் அழைத்தபோது, தம்மை ஒரு

கல்லூரி மாணவரென்று சொல்லிக் கொள்ளாமல், 'ட்ராஃப்-ஓ-டேட்டா' என்ற நிறுவனத்தின் தலைவராக அறிமுகப் படுத்திக் கொண்டார் கேட்ஸ்.

ட்ராஃப்-ஓ-டேட்டா என்பது இதற்கு முன் கேட்ஸ், ஆலென், மற்ற லேக்சைட் பள்ளித் தோழர்கள் இணைந்து தொடங்கிய ஒரு நிறுவனம்.

**"பில் கேட்ஸின் வடிகட்டிய பொய்யால் வலைக்குள் விழுந்தது நிறுவனம்!"**

இந்தக் குறுகிய காலகட்டத்துக்குள் மிகப் பிரபலமாகிவிட்ட அல்டெய்ர் கணினிக்குத் தேவையான மென்பொருள்களை எழுத ஏராளமானவர்கள் போட்டி போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு மத்தியில் தங்களை வித்தியாசப்படுத்திக் காட்ட பில் கேட்ஸ் ஒரு வேலை செய்தார். 'ஏற்கெனவே உங்களுக்குத் தேவையான சாஃப்ட்வேர்களை நாங்கள் எழுதி முடித்துவிட்டோம்' என்று ஒரே போடாகப் போட்டுவிட்டார் நிறுவனத்திடம்!

பொய்தான். ஆனால் கேட்ஸ் சொல்வது வடிகட்டிய பொய் என்று அறியாத எம்.ஐ.டி.எஸ். நிறுவனம், அவர் எதிர்பார்த்ததைப் போலவே வலைக்குள் விழுந்துவிட்டது. அல்டெய்ர் கணினிக்குத் தேவையான மென்பொருள்களை வடிவமைத்து எழுதித் தருகிற பொறுப்பு, அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. பிஸினஸ் துறையில் கேட்ஸ் சம்பாதித்த முதலாவது மிகப் பெரிய வெற்றி இது!

அல்டெய்ர் வெற்றியைக் கொண்டாடிய கையோடு, 1975 ஜூலை மாதத்தில் ஒரு புதிய நிறுவனத்தைத் தோற்றுவித்தார்கள் கேட்ஸும் ஆலெனும். மைக்ரோ கம்ப்யூட்டர்களுக்கான சாஃப்ட்வேர்களைத் தயாரிப்பதைக் குறிக்கும் வகையில் இந்த நிறுவனத்துக்கு அவர்கள் சூட்டிய பெயர்தான் 'மைக்ரோ-சாஃப்ட்!'

(தொடரும்)



* நண்பர் ஆலெனுடன் கேட்ஸ்...

இல்வாழ்க்கையின் இன்ப சுகத்தை நன்கு விளக்கும் கதை ஒன்று தெரியுமா? மனிதர்கள் தங்கள் பூத உடலை நீத்து, ஆவி வடிவில் யாத்திரை தொடங்கிச் செல்லும்போது, அவர்களில் சொர்க்கம் செல்வோரும், நரகம் செல்வோரும் தனித் தனியே பிரிக்கப்படும் முச்சந்தி ஒன்றிருக்கிறது. ஒருநாள் மூன்று ஆவிகள் அவ்விடத்தில் சேர்ந்தாற்போல் வந்து சேர்ந்தன. அங்கே காவல் புரிந்த தேவ தூதன், அவற்றை வழி மறித்து நிறுத்தி, அவற்றின் உலக வாழ்க்கையைப் பற்றிய விவரங்களைக் கேட்டான்.

முதல் ஆவி : தேவ! நான் பூவுலகத்திலே சுத்த பிரம்மசாரியாயிருந்தேன். பெண்களின் முகத்தைக்கூட ஏறிட்டுப் பார்த்ததில்லை. ஆகையால் என்னைச் சொர்க்கத்துக்கு அனுப்ப வேண்டும்.

தேவதூதன் : அடே! பூவுலகத்திலே அவ்வளவு சுகமாய் இருந்துவிட்டு இல்வாழ்க்கையில் புகாமலே தப்பித்து வந்தவனா நீ? அப்படியானால் கொஞ்ச நாளைக்கு நீ நரகத்தில் இருந்து வரலாம். போ அந்தப் பாதையில்!

இரண்டாவது ஆவி : ஸ்வாமி! நான் பதினெட்டு வயதில் மணம் செய்து கொண்டவன். அது முதல் அறுபத்திரண்டு வயது வரையில் இல்வாழ்க்கையின் இன்னல்களை அனுபவித்திருக்கிறேன். கருணை செய்ய வேண்டும்!

தேவதூதன் : ஐயோ பாவம்! நாற்பத்து நான்கு வருஷமா கிரகஸ்தாசிரமத்தில் இருந்து கஷ்டப்பட்டாய்? போதும் உனக்குத் துன்பம். இதோ சொர்க்கப் பாதையில் செல்!

மூன்றாவது ஆவி (முதல் இரண்டு ஆவிகளைப் பற்றிய தீர்ப்பையும் கவனித்துவிட்டு) : பிரபோ! அடியேன் ஒரு பெண்டாட்டி இறந்த பிறகு, இரண்டாவது மனைவியும் கல்யாணம் செய்துகொண்டு கஷ்டப் பட்டவன். என்னைச் சொர்க்கத்துக்கு அனுப்புங்கள்.



# சொர்க்கத்துக்குப் போ!

தேவதூதன் : அடே முட்டாள்! ஒரு தடவை இல்வாழ்க்கையின் கஷ்டங்களை அனுபவித்துத் தெரிந்துகொண்ட பிறகும் இரண்டாவது தடவை கல்யாணம் செய்து கொண்டாயா? உன்னைப் போன்ற நிர் மூடர்களுக்குச் சொர்க்கத்தில் இடமில்லை. போ நித்திய நரகத்துக்கு!



மேற்சொன்ன கதையில், புருஷர்களுக்கு நரகத்தைப் போல் துன்பமளிப்பதாக இல்வாழ்க்கை கருதப்பட்டிருப்பதேன்? அத வாது இல்வாழ்க்கையைப் புருஷர்களுக்கு நரகமாகச் செய்வது எது? ஸ்திரீகளுடைய விவாதம் செய்யும் சுபாவந்தான் என்று எனக்குத் தோன்றுகிறது.

**- பெண் தெய்வங்கள்-**
**வானதி வெளியீடு**

# நீடிக்கும் வினாக்குறி

பூந்தோட்டங்களே இல்லாத அந்தப் பிராந்தியத்தில் மலர்களின் வாசம். ரம்மியமான மரங்கள், பசுமையான நிழல்களை மண்ணில் போட்டுக் காற்றடித்துக் கொண்டிருந்தது.

மரங்களோடு மரமாய் ஓர் அரசமரம். அந்த அரசமரத்தின் மீது மட்டும், பாம்பின் முட்டையைக் குயில் அடைகாத்துக் கொண்டிருக்கிறது. அந்த மரத்தில் எதிரே கண்களில் ஆனந்த விழைவுடன் மக்கள்.

அரசமரம் - அது போதிமரமாயிற்றே!

வெள்ளை உடையில் ஓர் ஆண் தேவதையாய் வருகிறார் கௌதமபுத்தர். நெற்றியெங்கும் ஞானத்தின் விரிவு! விழிகளோடு அறிவின் ஒளி! நடையில் நம்பிக்கை! புத்தர் போதி மரத்தடியில் அமர்கிறார்.

அவருடைய சாந்தப் பார்வை தூர நோக்குகிறது.

ஓர் ஓடை.... ஓடையில் புலி நீர் பருகுகிறது. புலியின் நிழலில், நீர் பருகி முடித்த ஒரு மான் இளைப்பாறிக் கொண்டிருக்கிறது.

புத்தரின் உதட்டில் ஒரு ஜீவகாருண்யப் புன்னகை.

எதிரே உட்கார்ந்திருக்கும் மக்களுக்கு, பார்வையாலும் புன்னகையாலும் அன்பு செய்கிறார். தலைக்கேசத்தை வருடிவிட்டு, நெற்றியின் மீது அன்பு முத்தம் பதித்ததைப் போல் உணருகின்றனர் மக்கள்.

புத்தர் பேசினார்.

"அறிவின் மார்க்கத்தினால் அமைதியை அடைவோம். மனிதன் ஒரு தத்துவம். இந்தத் தத்துவம் ஒழுக்கம், அஹிம்சை, தர்மம் எனும் தனித்துவங்களினால் ஆன தத்துவம். ஒரு கல்லை எந்த மனிதன் கடவுள் என்று எண்ணி அதற்குப் பூ போட்டு வைத்து வணங்குகிறானோ அந்த மனிதன் ஒரு சிற்பத்தையோ, ஓர் அம்மிக் குழவியையோ செய்யவிடாமல் அந்தக் கல்லை வீணடித்து விடுகிறான் என்று அர்த்தம். கடவுள் இன்மையில் இல்லை... உண்மையில் உள்ளான். தர்மத்தின் குரல், ஏழையின் புன்னகை, அன்பின் ஆழம்... இவையே கடவுளின் முகவரி...!"

அரசமரத்தடியில் சருகுகளின் சலசலப்பு.

திடீரென "ஏய்... ஓ... ஏ..." என்ற அதட்டல்கள்.

முப்பது வயது மதிக்கத்தக்க இளம்பெண் வியர்வையில் பயத்துடன், கண்ணில் உயிருடன் ஓடிவந்து போதி மரத்தின் பாதங்களில் விழுந்து 'சுவாமி... என்னைக் காப்பாற்றுங்கள்... என்னைக் காப்பாற்றுங்கள்' என்று அலறுகிறாள்.

அவளுடைய குரலில் பிடிவாதம்!

அவளைத் துரத்தியபடி ஒரு கும்பல் வந்து சேருகிறது.

புத்தரைக் கண்டதும் ஒரு பின்வாங்கல். வந்த இருபதுக்கும் மேற்பட்டவருடைய கைகளில் கற்கள், விறகுகள்..!

புத்தர் கவனிக்கிறார் "இவளை ஏன் துன்புறுத்துகிறீர்கள்?"

யாரிடமும் பதிலில்லை. எதிரே

கூடியிருந்த மக்களுள் திகைப்பு. ஒரு முரட்டு இளைஞன் கத்தினான்.

"இவள் ஒரு விதவை சுவாமி. ஆனாலும் இவள் ஓர் ஆணுடன் தொடர்பு கொண்டாள். இவளை எப்படி ஊரில் வாழவிடுவது?"

அப்பெண்ணின் நெஞ்சில் ரணத்தின் கனம்; கண்களில் கனத்தின் கண்ணீர்.

"சுவாமி! இவர்கள் அவதூறு பேசுகிறார்கள். நான் கணவனை இழந்த துர்பாக்கியசாலி. ஆனாலும் நானொரு இளம்பெண். என்னையும் ஓர் இரக்கமுள்ள இதயம் நேசித்தது. எனக்கும் ஓர் அன்பு மனம் தேவைப்பட்டது. என் பகலுக்கு வெளிச்சம் தர... என் இரவுக்குத் தென்றல் தர... நானும் அவரும் இப்போது ஒருவனுக்கு ஒருத்தியாய் ஒன்றாக வாழ்கிறோம்.

இதோ! கொல்ல வந்த இவர்களில் பலர் பல பெண்களுடன் ராத்திரிகளைக் களங்கம் செய்தவர்கள். என்னையும் ரகசியமாக அழைத்தவர்கள்தான். இப்போது நியாயம் பேசுகிறார்கள்" என்று வீறிட்டாள்.



'ஓ! மனிதன் எத்தனை மாய்மாலத்துக்காரன். அவனே குற்றங்களை ஏற்படுத்துகிறான்; தண்டனைகளை வரையறுக்கிறான்; சிலருக்குத் தண்டனை தருவதற்காகவே அவர்களைக் குற்றவாளியாக்குகிறான்.'

புத்தர் கண்ணுள் தீர்ப்பின் தீச்சுடர்.

"மனிதர்களே! நீங்களே சில கோடுகளைக் கிழித்திருக்கிறீர்கள். இப்போது கோடுகள் உங்களைக் கிழிக்கின்றன.

இதோ! இந்தப் பெண் கணவன் இல்லாதவள்.

இவள் அன்பின் வசப்பட்டு ஓர்

ஆணின் நிழல் ஆனாள். அந்த ஆணும் இவள் நிஜம் ஆனான்.

இது குற்றம் ஆகாது. ஆகையால்தான் உறவு வேண்டியும் உணர்வுகளை மேன்மைப்படுத்தவும் தன் பிறப்பை அர்த்தப் படுத்தவும் ஒருவனுக்கு ஒருத்தியாக ஒருவனோடு இணைந்து இல்லறம் ஏகுகிறாள்!

நல்லறத்தோடு அவர்கள் பூக்கட்டும், போய் வாருங்கள்.

அந்திச் சூரியன் மேற்கில் வண்ண வண்ணப் பொடிகளை தினம் தினம் கைதவறிக் கொட்டிவிட்டு அள்ளுவதைப் போலவே அன்றும் அள்ளிக் கொண்டிருந்தது.



"என்னடா மார்க் எடுத்திருக்கே... ஒவ்வொரு பாடத்துலயும் இருபது... முப்பதுன்னு... இப்பெல்லாம் கங்குலியே அம்பது, தொண்ணூத்தியெட்டுன்னு எடுக்க ஆரம்பிச்சுட்டார் தெரியுமா?"

- கே.ஆனந்தன்

இரவின் ஆரம்பம் - நிலவின் ஆதிக்கம், நட்சத்திரங்களின் சின்னச் சின்னப் பொட்டு வெளிச்சப் பூங்காவனம்.

போதி மரத்தடியில் புத்தர் நிம்மதியான தியானத்தில்... ஆழ்நிலை தியானத்தில்... மனம் தெளிவான நீர்நிலையாகிறபோது உள்ளே எல்லாம் தெரியும்.

போதி மரத்தடியில் ஒரு பல்லக்கு வருகிறது. பல்லக்கிலிருந்து ஓர் உயர்குலப் பெண்ணின் வருகை. சலங்கை சப்தம் புத்தரை நெருங்குகிறது. கைவளையல்களின் கலகலப்பு. ஏதோ ரம்மிய மணம்.

புத்தர் கண்களை மூடிய நிலையிலேயே பேசுகிறார். "யாரம்மா நீ?"

"சுவாமி! காலையில் ஒரு வழக்கு வந்ததாமே..."

புத்தர் ஒரு கடும் மௌனத்துடன் "ம்..."

"அதில் நீங்கள் தீர்ப்பு சொன்னது நினைவுள்ளதா உங்களுக்கு?."

"ஆமாம், நினைவுள்ளது" என்று கண் மூடியபடியே பேசுகிறார்.

"இல்லறம் ஏகுதலே நல்லறம், உணர்வுகளை மேன்மைப்படுத்தவே துணையாகும் உறவு என்றீர்களாமே... இது எல்லாருக்கும் பொருந்துமா?"

புத்தரின் பேரின்பப் புன்னகை கண்ட உதட்டில் ஒரு ஞானச் சிரிப்பு.

"எல்லோருக்கும் பொருந்துமம்மா."

"சுவாமி! அது எனக்கும் பொருந்துமா?" அவள் குரல் தழுதழுக்கிறது.

புத்தர் கண்களைத் திறக்கிறார். ஆனந்த தியானத்தில் மூழ்கியிருந்தவரின் ஆன்மா ஒரு கணம் விழித்தது. அவர் சொன்ன வார்த்தைகள் சொற்ப கணமே அவர் முன் நின்றன. மீண்டும் அவர் கண்களை மூடி மனத்துக்குள் ஆனந்த ஸ்ருதியை மீட்டத் தொடங்கினார்.

சித்தார்த்தனின் மனைவி யசோதரை ஆதங்கக் கண்ணீர்த் திவலை கண்களில் திரள, புத்தரையே ஒரு நொடி கம்பீரமாய் ஆச்சர்யத்தோடும், பெருமையோடும் ராட்சச வினாக்குறியாகப் பார்த்திருந்துவிட்டுப் பல்லக்கினுள் ஏறி மறைந்தாள்.

# வேதனை தரும்

மாதவிடாயின்போது வலியால் அவதிப்படாத பெண்கள் மிகக் குறைவு. திருமணம் ஆனவர்கள், இளம் பெண்கள் என அனைத்துப் பெண்களுமே இவ்வலியை அனுபவிக்கின்றனர். அக்னி ஸ்வரூபமான பெண்களின் அகத்த இரத்தம், அபான வாயுவின் மூலமாக இருபத்தெட்டு நாட்களுக்கு ஒருமுறை வெளியேற்றப்படுகிறது. அந்தக் காலகட்டத்தில் பெண்ணை 'ரஜஸ்வலா' என்கிறது ஆயுர்வேதம். 'டிஸ்மெனோரியா' என்கிற மாதவிடாய் வலியை ஆயுர்வேதம் இயற்கையான அம்சமாகக் குறிப்பிடவில்லை.

அபான வாயு தடைபட்டாலோ அல்லது அதிகமானாலோ ஏற்படுகிறது இந்த வலி. 'உதாவர்த்த யோனி' என்று இதனைக் குறிப்பிடுகிறது ஆயுர்வேதம். வலி வருவதற்கு விசேஷ காரணங்கள் சில நேரங்களில் கிடையாது.

பெண்கள் பூப்படையும் காலத்திலேயே இந்த வலி ஆரம்பமாகிறது. ஐம்பது சதவிகிதப் பெண்களுக்கு இவ்வலி பெரும் பிரச்னையாக உள்ளது. ஐந்து முதல் பதினைந்து சதவிகிதப் பெண்களுக்கு இந்த வலி மிகக் கடுமையாக இருப்பதால் அன்றாட வேலைகளைக் கூடச் செய்ய முடியாமல் போகிறது. பள்ளி, கல்லூரிக்குச் செல்ல முடியாத அளவுக்கு வலி உண்டாகும். ஆனால் வயது அதிகரிக்க அதிகரிக்கவும், பிரசவத்துக்குப் பிறகும் இந்த வலி குறையும்.

சரி, இந்த வலி எப்படி ஏற்படுகிறது? கர்ப்பப்பை உதிரத்தை வெளியேற்றுவதற்காகச் சுருங்கி விரிவடைவதாலும், இரத்த ஓட்டம் குறைவதாலும் ஏற்படுகிறது. 'எண்டோமெட்ரியோஸிஸ்' என்கிற நோயினாலும் இதே மாதிரியான வலி தீவிரமாகக் காணப்படுகிறது. மாதவிடாய் நாட்களில் முதல் இரண்டு நாட்கள் வலி அதிகமாக இருக்கும். மூன்றாவது நாள் குறைந்துவிடும். நான்காவது நாளும் வலி தொடர்ந்தால், அது எண்டோ மெட்ரியோஸிஸாக இருக்கக்கூடும். மருத்துவப் பரிசோதனை செய்து இதைக் கண்டறியலாம்.

எண்டோமெட்ரியோஸிஸ் வலியைத் தவிர ஃபைப்ராய்டு போன்ற கட்டிகள் (யோனி கந்தம்), கர்ப்பப்பையின் தசைகளில் ஏற்படும் நோய்கள், ஃபெலோபியன் டியூப்களில் (ஆர்த்தவக ஸ்ரோதஸ்) ஏற்படுகின்ற அழற்சி ஆகியவற்றாலும் வலி ஏற்படும்.

மாதவிடாய் வலி அடிவயிற்றில் தொடங்கிக் கீழ்முதுகு, கால்கள்வரை பரவும். மாதவிடாய்க்குச் சற்று முன்போ, மாதவிடாயின்போதோ வலி ஏற்பட்டு வலி இருபத்து நான்கு மணி நேரத்தில் உச்சத்தை அடையலாம். இரண்டு நாட்களில் வலி தணியும். வலியோடு, தலைவலி, மலச்சிக்கல், வாந்தி எடுக்கும் உணர்வு, சில நேரங்களில் வயிற்றுப்போக்கு, வழக்கத்தைக் காட்டிலும் அடிக்கடி சிறுநீர் கழிக்க வேண்டும் என்ற உணர்வு போன்றவை காணப்படலாம். சில பெண்களுக்கு அதிக வாந்தி இருக்கும். மன அழுத்தம், படபடப்பு, சோக உணர்வு, கோபம், வயிறு உப்பிய உணர்வு போன்றவையும் இருக்கக்கூடும். ரத்தமானது திரவ நிலை மாறி, கட்டியாகிப் போய் வெளியேறுவதும் உண்டு.

கீதா என்ற பள்ளி மாணவியை அவள் பெற்றோர் எங்களிடம் அழைத்து வந்திருந்தனர். அவளுக்கு 'உதாவர்த்தம்' இருப்பதைக் கண்டோம். சிகிச்சையின் முதற்கட்டமாக, அவளுக்கு அபான வாயுவை முறிக்கும் உணவு முறையைச் சிபாரிசு செய்தோம். இந்த அபான வாயு சீதத் தன்மை (குளிர்ச்சி) உடையது. இச்சீதமும், வறட்சியுமே வலியை உண்டாக்கும். ஆகையால் இந்தப் பெண்ணுக்கு தன்வந்

# டாக்டர் எல்.மஹாதேவன்

யோகா க்ளாஸ் போய் முறையா யோகா கத்துக்கிட்டு செஞ்சா, இந்தப் பிரச்னையிலிருந்து எளிதாக விடுபடலாம்.

16

தரத் தைலத்தினை சிறிது உப்பு சேர்த்துச் சூடாக்கி தினமும் குளிப்பதற்கு முன், (குறிப்பாக மாத விடாய்க்கு ஏழு நாட்களுக்கு முன்) தொப்புளுக்கு அடியில் சூடு ஆறும்முன் தடவி 'டப் பாத்' என்னும் 'அவஹாக ஸ்வேத'த்தில் இருக்கச் செய்தோம்.

தன்வந்தரத் தைலம் கிடைக்காதவர்கள், நல்லெண்ணெயில் சீரகம், பூண்டு போட்டு நன்கு காய்ச்சி இதே போல்

# வலி!



செய்யலாம். வெள்ளைப் பூண்டு பால் கஷாயம், கறிவேப்பிலை, மாதுளம்பழம், பெருங்காயம், கருஞ்சீரகம் - சீரகம் - சுக்கு - மிளகு - திப்பிலி - சூரணம், திரிகடுகு சூரணம் போன்றவையும் மருந்துகளாக இந்நோயில் பயன்படுத்தப்படுகின்றன.

வலி உள்ள நேரத்தில் தசமூலம் சேர்த்த சுகுமாரம் கஷாயத்தில் ஹிங்கு வசாதி சூரணம் (பெருங்காயம், வசம்பு சேர்ந்தது) சேர்த்துக் கொடுப்பது மிகவும் நல்லது. 'ஹிங் குத்ரிகுணம்' என்ற எண்ணெயை இந்தக் கஷாயத்தில் சேர்த்துக் கொடுக்கலாம். 'லக்ஷ்மணாரிஷ்டம்' என்ற அரிஷ்டம் இந்நோய்க்கு மிகவும் பயனுள்ளது. நாம் வீட்டில் செய்கின்ற இஞ்சி லேகியமும் இதற்குச் சிறந்த மருந்து. வீட்டில் தினமும் எள்ளுருண்டை சாப்பிட்டாலும் இந்த ஸூதக வலியை நன்கு கட்டுப்படுத்தும்.

வலியோடு வாந்தியும் அதிகமாக இருக்கின்ற சமயத்தில் தன்வந்தரக் குளிகை, மாதிபல ரஸாயனம் ஆகியவற்றைத் தரலாம். பிரச்னை முற்றாமல் இருப்பதற்கு, காலையில் பாலில் சுகுமார க்ருதமோ, தாடிமாதி என்னும் மாதுளம் பழச்சாறு கொண்டு செய்த நெய்யோ கொடுப்பது சிறந்தது. இதோடு நல்ல ஓய்வு, உடற்பயிற்சி, பவனமுக் தாசனம் போன்ற ஆசனங்களைச் செய்வது நல்ல பலனைத் தரும்.

கர்ப்பப்பையின் உட்பகுதி ஜவ்வு போன்ற 'எண்டோமெட்ரியம்' எனப்படும் திசு, தன் இடத்திலிருந்து பெயர்ந்து வந்தோ, பரவியோ கர்ப்பப்பையை ஒட்டிய உறுப்புகளில் படியுமேயானால், அதற்கு 'எண்டோமெட்ரியோஸிஸ்' என்று பெயர். இதனை 'வாதகி யோனி வியாபத்' என்று ஆயுர்வேதம் சொல்கிறது. இந்தப் பாதிப்பு சினை முட்டையிலோ, பெருங்குடலிலோ அல்லது சிறுகுடலிலோ கூட காணப்படும். சில நேரங்களில் சிறுநீரகத்திலோ, சிறுநீர்ப்பையிலோ காணப்படும். இதனால் அதிகமான வலி ஏற்படும். இதன் காரணமாக அட்ஹிஷன் எனப்படும் ஒட்டுந்தன்மை உறுப்புகளிடையே ஏற்பட்டு, அவற்றின் செயல்களில் குறைபாடு உண்டாகும். முதல் குழந்தையை முப்பது வயதுக்கு மேல் பெறுபவர்களுக்கு இப்பிரச்னை உள்ளது. இருபத்தைந்து முதல் நாற்பத்தைந்து வயதுக்குள் உள்ள பெண்களில் பத்து முதல் பதினைந்து சதவிகிதம் பேருக்கு இந்நோய் காணப்படுகிறது.



வலி வயிற்றின் அடிப்பகுதியில்தான் காணப்படும். மாதவிடாயில் ஒழுங்கின்மையும், ஏற்றத்தாழ்வும் காணப்படும். சில சமயங்களில் எண்டோமெட்ரியோஸிஸ் நோய் அதிகமாக இருந்த போதும் எந்தவிதமான அறிகுறியும் காணப்படாது! அதேபோல் சிறிய அளவில் நோய் உள்ளவர்களுக்கு வலி அதிகமாகக் காணப்படுவதும் உண்டு. குழந்தைப் பேறின்மைக்கு இதுவும் ஒரு காரணமாகலாம். சில சமயங்களில் ஆசனவாய் வழியாகக்கூட இரத்தப்போக்கு இருக்கும். மரபு ரீதியாக சில குடும்பங்களில் இந்நோய் மிகுந்து காணப்படுகிறது. முப்பது வயதுக்கு மேல் முதல் குழந்தை பெறுவோருக்கும் இந்நோயின் அபாயம் அதிகம்.

'லேப்ரோஸ்கோப்' மூலம் இந்நோய் மருத்துவர்களால் நிர்ணயம் செய்யப்படுகிறது.

நவீன மருத்துவத்தில், சினை முட்டைகளின் செயல்பாடுகளைக் குறைப்பதன் மூலம் எண்டோமெட்ரிய திசுக்களின் வளர்ச்சியை மட்டுப்படுத்துவார்கள். அறுவை சிகிச்சைகூட செய்வார்கள். ஆயுர்வேதத்தில் சிறுதேக்கு சூரணம் மிகுந்த பலனைத் தருகிறது. இதற்கு சிற்றரத்தை, ஆமணக்கு தேவதாரு சேர்ந்த மஹாராஸ்னாதி கஷாயம் தன்வந்தரம் நூற்றியொரு ஆவர்த்தி, குமரி லேகியம், ஜீராகாரிஷ்டம் போன்றவை நல்ல பலனைத் தருகின்றன என்பது அனுபவ ரீதியான உண்மை.

"முப்பது வயதுக்கு மேல் முதல் குழந்தை பெறுவோருக்கு இப்பிரச்னை ஏற்படலாம்!"

(தொடரும்)

## தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி - 13

பூப்பெய்தும் பருவத்தில் உள்ள பெண் குழந்தைகளுக்குத் தரத் தகுந்த ஊட்டச்சத்து உணவுக் குறிப்பை எழுதி அனுப்புங்கள். மிகச் சிறந்த குறிப்புக்கு தன்வந்தரி டாலர் முதல் பரிசு. இரண்டாம் பரிசு டாக்டர் எல்.மஹாதேவன் எழுதிய தேவமருந்து முதல் பாகம் புத்தகம்.

அஞ்சலட்டையில் 'பரிசுப் போட்டி-13' என்று குறிப்பிட்டு அனுப்பவும்.

கடைசி தேதி 12.2.2007.
ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.






# திருத்தியமைக்கப்பட்ட தேசிய காசநோய் தடுப்புத் திட்டம், தமிழ்நாடு

## காசநோயாளிகளே விழித்துக்கொள்ளுங்கள்!







## எச்சரிக்கை

- தொடர் இருமலா, நெஞ்சு வலியா?
- திடீர் எடை குறைதலா, பசியின்மையா?
- காய்ச்சலா, சளியில் இரத்தமா?

**காசநோயாக இருக்கலாம் - கவலை வேண்டாம்.**
**காசநோயை முழுமையாக குணப்படுத்த முடியும்.**

- காசநோய்க்கான பரிசோதனைகள், மருந்துகள் **இலவசமாக** அனைத்து துணை சுகாதார மையங்களிலும், ஆரம்ப சுகாதார மையங்களிலும், அரசாங்க மருத்துவமனைகளிலும் கிடைக்கும்.
- காசநோயாளிகள் மருத்துவமனையில் உள் நோயாளிகளாக சிகிச்சை பெற வேண்டிய அவசியம் இல்லை.
- வீட்டிலிருந்தபடியே DOTS – (குறுகிய கால நேரடி சிகிச்சை) முறையால் மட்டுமே ஆறு முதல் எட்டு மாதங்களுக்குள் காசநோயை கட்டுப்படுத்த முடியும். நோயாளிகளின் வீட்டிற்கு அருகாமையிலேயே மருந்துகள் பெற, வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

**காசநோயற்ற சமுதாயத்தை நோக்கி விறு நடை போட உதவுங்கள்!**

பொது நலன் கருதி வெளியிடுவோர்:

**மாநில காசநோய் தடுப்புச் சங்கம், சென்னை-600 006.**

Visit us at: www.tn.gov.in / www.southindia.com

செய்தி/1557/[illegible]/2006

கம்யூனிகேஷன் என்கிற திறமை இருந்தால் மட்டுமே இளைஞர்களுக்குக் கதவுகள் அகலமாகத் திறக்கப்படுகின்றன. பர்சனாலிட்டி இல்லாத மனிதன் வெற்று மானிடனாக ஒதுக்கப்படுகிறான். இந்த இரு கருவிகளையும் கூர் தீட்டிக் கொண்டாலொழிய இன்றைய வாழ்க்கையில் பெரிதாக எதையும் சாதித்துவிட முடியாது'' என்கிறார் 'சென்டர் ஃபார் கம்யூனிகேஷன் எக்ஸலன்ஸ்' நிறுவனத்தை நடத்தி வரும் மனிதவள மேம்பாட்டுத் துறை ஆலோசகரான கீதா சங்கர். இக்கால இளைஞர்களுக்கு அவசியமான இவ்விரு வளங்களின் முக்கியத்துவத்தைப் பற்றி இங்கே மேலும் சொல்கிறார்...

''இரண்டாம் உலகப் போர்கூட கம்யூனிகேஷன் பிரச்னையால்தான் ஆரம்பமானது. நம் வீட்டில் நடக்கும் பல பிரச்னைகளுக்குக் காரணம் நம் புரிதல்களில் நிலவும் பிரச்னைகள்தான். இன்று பல இளைஞர்களுக்கு வேலை என்பது ஏதோ காணக் கிடைக்காத அதிசய நெல்லிக்கனியாக இருப்பதன் காரணம் அவர்களிடையே உள்ள தகர்க்க முடியாத தயக்கங்களும் தன்னை முன்னிறுத்தும் தைரியம் இல்லாததும்தான். இதனால் நம்மிடையே உள்ள மனித வளங்கள் ஆற்று நீர் கடலில் வீணாவதைப்போல் பயனற்றுப் போகின்றன.

கம்யூனிகேஷனும் பர்சனாலிட்டியும் உள்ள மனிதனுக்கு அந்த ஒரு திறமையே அவன் எதிர்கொள்ளும் தடைக்கற்களை அகற்றி விடுகிறது. நம் பர்சனாலிட்டியைப் பலவிதமான கூறுகள் நிர்ணயிக்கின்றன. சிந்தனைகள் இதில் முதலிடம் பிடிக்கின்றன. எந்தக் குப்பைக் கூளமும் இன்றி சிந்தனை பளிங்குபோலத் தெளிவாக அமைந்துவிட்டால், பிறகு நம் எண்ணங்கள் அனைத்தும் பாஸிட்டிவாகவே அமைந்துவிடும். இதனால் நம் நடத்தையிலும் மாற்றங்கள் நிறைய ஏற்படும்.

• கீதா சங்கர்

# வாழ்க்கைக்கு



கம்யூனிகேஷன் என்பது நமது தெளிந்த சிந்தனைகளைச் சிறந்த வார்த்தைகளால் வெளிப்படுத்தி எதிராளியைப் புரிந்து கொள்ள வைப்பது. வாதிடுவதால் எந்தப் பலனும் ஏற்படப் போவதில்லை. சமீபத்தில் பரபரப்பாகப் பேசப்பட்ட 'பிக் பிரதர்' ரியாலிட்டி நிகழ்ச்சியில் எப்படி ஷில்பா ஷெட்டி வெற்றி பெற்றார் என்று அலசுவதைவிட சக போட்டியாளரான ஜேட் கூடி ஏன் தோற்றுப் போனார் என்பதையே கூர்ந்து கவனிக்க வேண்டும். அளவுக்கு அதிக



# இரு கருவிகள்!

மாக வாதிட்டதாலேயே அவரை யாருக்கும் பிடிக்காமல் போனது. இண்டர்வியூக்களில் நடத்தப்படும் க்ரூப் டிஸ்கஷனில் யார் ஒருவர் தேவைக்கதிகமாக வாதாடுகிறாரோ, அந்த நபர் வெளியேற்றப்படுவது சகஜம்.

கம்யூனிகேஷன் நன்றாக இருந்தால் மட்டுமே நம் பர்சனாலிட்டிக்கு ஒரு வடிவம் கிடைக்கும். அதிர்ந்தும் வேகமாகவும் பேசுவதுதான் பர்சனாலிட்டியைப் பிரதிபலிக்கும் என்றால் அது தமாஷ். நோபல் பரிசு கிடைத்த செய்தி அறிந்ததும் அன்னை தெரசா அடுத்த விநாடி வானத்துக்கும் பூமிக்கும் குதிக்கவில்லை. பொறுமையாக தம் வார்த்தைகளை இவ்வாறு கோத்துச் சொன்னார். "வாருங்கள்... போய்க் கடவுளைப் பிரார்த்திப்போம்."

ஆக, அசாதாரண சமயங்களில் நம்மை நாம் இழக்காமலிருக்க வேண்டும்.

சொந்தக் காலில், சொந்தக் கருத்தில் நிற்க முடியாதவர்கள்தான் பர்சனாலிட்டி குறைபாடு உள்ளவர்கள். கைகட்டிக் கொண்டு ஒருவர் பேசினால் அடுத்தவருடைய உதவியை எதிர்பார்க்கிறார் என்று அர்த்தம். பேசும்போது வாயருகே அடிக்கடி கையைக் கொண்டு போனால் நீங்கள் பேசுவதில் குழப்பம் உடையவர். கையைப் பின்னால் கட்டிக் கொண்டால் டென்ஷனாக இருக்கிறீர்கள் என்றெல்லாம் நீங்கள் சொல்லாமலேயே உங்களுடைய மன ஓட்டத்தைப் புரிந்து கொள்ள முடியும். யாரிடமும் நீங்கள் ஒரு அடி இடைவெளியில் பேசுகிறீர்களோ, அவர்களோடு நெருக்கமாக உள்ளீர்கள் என்று அர்த்தமாகும். நான்கு அடி இடைவெளி என்றால் பிஸினஸ், பன்னிரண்டு அடி இடைவெளி (மேடைப் பேச்சு) என்றால் மக்களைக் கவர முயற்சி செய்கிறீர்கள் என்று உங்களுடைய ஒவ்வோர் அசைவுக்கும் அர்த்தம் கற்பிக்க முடியும்.

பர்சனாலிட்டி குறைகளைப் போக்க ஒரே வழி தொண்ணூறு டிகிரியில் கண்ணுக்குக் கண்ணாகப் பேசுவதுதான். கையை இயல்பாக வைத்துக் கொள்ளப் பழக வேண்டும். கைத்தடி போல எதையாவது ஊன்றிக் கொள்வதும் உடனே அகற்றப்பட வேண்டிய பழக்கம்.

எல்லோருக்குள்ளும் ஏதாவதொரு திறமை ஒளிந்து கொண்டுதானிருக்கிறது. யாரும் அடி முட்டாள்கள் கிடையாது. கம்யூனிகேஷன் மற்றும் பர்சனாலிட்டி குறைபாடுகளெல்லாம் காலில் குத்திய முள்போல. அகற்றிவிட்டால் வழிநெடுக எந்தத் தடையும் இருக்காது."

- **ச.ந.கண்ணன்**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**

# முத்துக்கள்

அண்மையில் அகில இந்தியக் காவல் துறைப் பணித்திறன் போட்டிகள் சென்னையில் நடைபெற்றன. நாடெங்கிலுமிருந்து 86 காவல்துறை மோப்ப நாய்கள் போட்டிகளில் பங்கேற்றன. குற்றப் புலனாய்வு, வெடிகுண்டு கண்டறிதல், போதை மருந்துகளைக் கண்டு பிடித்தல் என்ற மூன்று பிரிவுகளில் மோப்ப நாய்களுக்கான போட்டிகள் நடைபெற்றன. மூன்று பிரிவுகளிலுமே முதல் இடத்தைப் பிடித்துத் தங்கக் கோப்பையை வென்றவை தமிழகக் காவல் துறையைச் சேர்ந்த சிந்து, டோனி மற்றும் மார்ஷல் ஆகியவைதான். தங்கம் வென்ற முத்துக்கள் மூன்றும் தங்கள் சுவாரஸ்யமான கதைகளைச் சொல்கின்றன. கேட்போமா?



"என் பேர் சிந்து. நான் ராட்வீலர் இனத்தைச் சேர்ந்த நாய். நான் மூன்று மாதக் குட்டியாக இருந்தபோது, ஒன்பது மாத காலம் எனக்கு பயிற்சிகள் அளிக்கப்பட்டன. இப்போது எனக்கு ஆறு வயது. நான் தமிழக அளவிலும், அகில இந்திய அளவிலும் நிறையப் போட்டிகளில் கலந்து கொண்டு கோப்பைகளை வென்றிருக்கிறேன்.

ஓர் அனுபவத்தைச் சொல்லட்டுமா? சென்னை கோட்டூர்புரம் பகுதியில், கூவம் ஆற்றில் ஓர் ஆணின் பிணம் மிதந்து கொண்டிருந்தது. அதைப் பற்றிய எந்த விவரமும் தெரியவில்லை. தகவல் அறிந்து நான் ஸ்பாட்டுக்குப் போனேன். இறந்த மனிதனின் சட்டைத் துணியை முகர்ந்து பார்த்தேன். சுமார் இரண்டு கிலோ மீட்டர் ஓடினேன். கடைசியில் ஒரு வீட்டின் முன்போய் நின்றேன். அது கொலை செய்யப்பட்டுக்

கூவத்தில் கிடந்தாரே அவருடைய வீடு தான். பிறகு போலீஸ்காரர்கள் குற்றவாளி களைக் கண்டுபிடித்தார்கள்."

"என் பேர் டோனி. லேப்ரடார் இனத்தைச் சேர்ந்த என்னை, ஒன்றரை வயதுக் குட்டியாக இருந்தபோது வாங் கியது காவல் துறை. இப்போது எனக்கு வயது ஆறு. எனக்கு வெடிகுண்டுகளை யும் ஆயுதங்களையும் கண்டுபிடிப்பதற் காகப் பயிற்சி தரப்பட்டுள்ளது. நான் பல் வேறு போட்டிகளிலும் கலந்து கொண்டு, நிறைய கோப்பைகளை வென்றிருக் கிறேன். இதுவரை பல வெடிகுண்டு சோதனைகளில் ஈடுபட்டிருக் கிறேன். ஒரு தடவை திருச்சி கல்லூரி வளாகம் ஒன்றில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த ஒரு துப் பாக்கியை நான் கண்டுபிடித்தது மறக்க முடியாத அனுபவம்!"

"என் பெயர் மார்ஷல். தமிழகக் காவல் துறை ஹைதராபாத்திலிருந்து மூன்று மாதக் குட்டியாக என்னை வாங் கிக் கொண்டு வந்தது. லேப்ரடார் இனம். எனக்கு அடிப்படைப் பயிற்சியும், போதை மருந்துகளைக் கண்டுபிடிப்ப தற்கான விசேஷப் பயிற்சியும் தரப்பட் டுள்ளன. நானும் ஏராளமான கோப்பை களை வென்றிருக்கிறேன். தமிழகக் காவல் துறையின் பெருமைக்குரிய நாய்ப் படை யின் முக்கியமான ஆள் நான். இப்போது புதுக்கோட்டையில் பணியாற்றி வரு கிறேன்."

**தொகுப்பு : எஸ்.சந்திரமௌலி**
**படங்கள் : பொள்ளாச்சி சுந்தரம்**

# டூஸ்று!

# தொடர் கதை

அம்பேத்கர் ஆட்டோ ஓட்டுநர் சங்கம் அண்டு நற்பணி மன்றம் (ரிஜிஸ்டர்டு) போர்டு வைத்துக் கொடி பறந்த தூண் அருகே வெளேரென்று வேட்டி கட்டி இரண்டு பேர் வந்து இறங்கினார்கள். பக்கவாட்டு ஸ்டாண்டு போட்டு நிறுத்திய பைக்கின் முன்புறம் சிறிதாகக் கட்சிக் கொடி பறந்தது. பன்னிரண்டு வருடங்களாகப் பறக்கிற கொடி. ஒரு லைசென்ஸின் பணியைச் செவ்வனே செய்யும் சிறந்த மாற்று. பின்னால் வந்து நின்ற வெள்ளை நிற அம்பாசிடரிலிருந்து வட்டச் செயலாளர் இறங்கினார். பக்கத் துணையாக மேலும் நான்கு பேர் அவர் பின்னால் இறங்கி வந்து நின்றார்கள்.

இறங்கியவர்கள் சுற்றும் முற்றும் பார்த்தார்கள். நூறு, நூற்றைம்பது குடிசைகள் இருக்குமா? அளவெடுத்துத் தைத்தது போல் முன்புறம் சரிந்த கூரைகள். வீதியில் காய்ந்த அலுமினியப் பாத்திரங்கள், துணிகள். எல்லாச் சந்துகளிலிருந்தும் புறப்பட்டு ஓடும் நிஜார் மட்டும் அணிந்த சிறுவர்கள். எங்கோ தூரத்தில் கேட்கிற பெண்களின் சண்டையொலி. அந்தப் பக்கம் ஓடுகிறது ஆறு. அடையாறு என்பார்கள். இனியும் வெட்டியெடுக்க மண் இல்லாத காரணத்தால் லாரி முதலாளிகளால் கைவிடப்பட்டு ஆறு வருடங்கள் ஆகிவிட்டன. முத்துராமன் சொல்லியிருந்தான். 'வந்து பாருங்க தலைவீரே... துணி துவைக் கறவங்க பெரும்பாலும் கல்லு தேடுறதே கெடியாது. அப்படியே தரையில நாலு குமுக்குக் குமுக்கி அலசிப் புழிஞ்சி போட்டுட்டுப் போய்க்கிட்டே இருப்பாங்க. அப்பால எங்கேருந்து தண்ணி தங்கும்?'

ஆ, ஏழைகளின் பிரச்னை! எத்தனை யுகங்களாக ஒரு ஜீவநதி போல் தழைத்துக் கொண்டிருக்கிறது? ஒரு சந்தர்ப்பம் கொடுத்து நாலு பேரைக் கூப்பிட்டு வைத்துப் பேசச் சொன்னால் மணிக்கணக்கில் பொழிந்து தள்ளிவிடுவார்கள்.

ஒரு சமயம் வட்டம், மாவட்டத்தைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது மாவட்டம் பேச்சுவாக்கில் சொல்லிக் கொண்டிருந்தார்.

"இந்தா பாருய்யா... ஒரு லாஜிக்கு இருக்குது. கஸ்டப்படறவன்னு நாலு பேரு இல்லன்னா, நாமல்லாம் தலைல துண்டு போட்டுப் போய்க்கினே இருக்க வேண்டியதுதான். குறிப்பா படிக்காதவன். யோசிச்சுப் பாரு, படிச்சவன் எத்தினி பேரு நமக்கு வோட்டுப் போடுறான்? வுட்டா நெத்தில கொழச்சி நாமத்தப் போடுவான். ஒலகத்துல ஒரே ஒரு நியாயம்தான் நெரந்தரம். கடல் நெறைய மீனு இருக்கறது நாம திங்கறதுக்காக. கோழியும், ஆடும் கூட்டம் கூட்டமா உற்பத்தி ஆவுறது நாம தங்கறதுக்காக. கோழிக்குத் தீவனம் தான் போடுவா. கோயிலா கட்டுவா? அதே மாதிரிதான். எலக்சன் டயத்துல சில்வர் குடம் குடு; சிரிப்பு மாறாம கைகூப்பு. 'ஆத்தா, நீதான் வாழ வெக்கணும்'னு கால்ல வுழு. தப்பே இல்ல. ஆனா அத்தோட நிப்பாட்டிக்க.



பா.ராகவன்

# கொசு 5

உன்ன முன்னேத்தறேன்னு போயி உஸ்கூலு தெறக்கேன், ஆட்டோ வாங்கித் தர்றேன்னு ஆரமிச்சன்னா, அவன் காலு மேல காலு போட்டுக் கேள்வி கேக்க ஆரம்பிச்சிருவான். நாலு வார்த்த அவன் இங்கிலீசல பேசினான்னா உன் நெஞ்சு தாங்குமாய்யா? அப்பிடியே குலுங்காம வம்சம் வம்சமா அவங்கள இருக்கற படியே அடை காக்கணும். அவ்ளோ தான்."

ஒரு காலத்தில் மாவட்டம் நிறைய சொல்லிக் கொடுத்திருக்கிறார். அவர் வட்டமாக இருந்த காலம் அது. எப்போதும் ஏழெட்டுச் சீடர்கள் அவரைச் சுற்றி இருப்பார்கள். ஓய்வும் மூடும் வாய்த்தால் பொன்மொழிகளாக உதிர்த்துக் கொண்டே இருப்பார். நிறைய ரத்தினங்கள். நிறைய கெட்ட வார்த்தைகள். தடாலடி விமர்சனங்கள். அங்கே நக்கல் கொஞ்சம். இங்கே ஏக்கம் கொஞ்சம். அவருக்கும் கனவுகள் இருந்தன. யாருக்குத் தான் இல்லை? கழுதையாக மாறிக் காலமெல்லாம் சுமந்தேதான் தீர வேண்டியிருக்கிறது. சில சமயம் கழுதை உதைக்கும். சில சமயங்களில் சுமந்த கனவைப் பத்திரமாக இறக்கி வைக்கும். அவர் மாவட்டமாகி, எம்.எல்.ஏ.வும் ஆகி, அடுத்த வருடம் அமைச்சரே ஆகிவிடுவார் என்று பேசிக் கொண்டிருக்கிறார்கள்.



வட்டம் பெருமூச்சு விட்டார். தன் கழுதைக்கு உதைக்க மட்டுமே தெரிந்திருந்த அவலத்தை நினைவு கூர்ந்ததன் விளைவான பெருமூச்சு அது.

"எலேய், ஓடுடா. முத்துராமன் வூடு எதுன்னு கேளு. கேட்டுக்கினு வா."

சட்டென்று தரையைத் தொட்டு உத்தரவிட்டார் வட்டம். இரண்டு பேர் ஆளுக்கொரு திசையில் ஓடினார்கள். இது ஒரு முயற்சி. அநேகமாக அவரது வாழ்நாளில் மேற்கொள்ளப் போகிற மிகப்பெரிய முயற்சி. அசுர முயற்சி என்பார்களே, அது. தானும் தனக்கு வேண்டியவர்களுமாக நாள் கணக்கில் உட்கார்ந்து என்ன செய்யலாம் என்று யோசித்த போதெல்லாம் இப்படி ஒரு யோசனை

தோன்றியதில்லை. ஒரு குப்பத்தைத் தத்தெடுத்து முன்னேற்றுகிற யோசனை. முத்துராமன் என்கிற சாதாரணத் தொண்டன் கொடுத்த யோசனை. நல்லது. தொண்டர்கள் யோசிப்பவர்களாகவும் இருப்பது உத்தமம். ஆனால், தலைவர்களுக்காக மட்டும்.

"எலேய், அந்த முத்துராமன் டெய்லர் வேலதானே பாக்கறான்? சரியாத் தெரியும்ல?" என்றார் திரும்பிப் பார்த்து.

"ஆமா தலைவரே... அதனாலதானே தையல் மிசின் வாங்கி எடுத்தாந்திருக்கோம்?" என்றான் ஓர் அடிப்பொடி.

"ஆங்..." என்று எங்கோ பார்த்து என்னவோ சிந்திக்கத் தொடங்கினார் வட்டம். முத்துராமன் பேசியவை அனைத்தும் அவருக்கு மீண்டும் செவிகளில் ஒலித்தன.

"அரசியல் முக்கியம்தான் தலைவரே. முழிப்போட இருக்கறது முக்கியந்தான். ஆனா, அப்பப்ப நாம மக்கள் பக்கம் இருக்கம்னு காட்டிக்கத் தேவலையா? நம்மூருல அரசியல்வாதிங்களவுட, பிரசிடெண்ட ஏன் மக்கள் தெய்வமா நினைக்கறாங்க? யோசிச்சிப் பாருங்க. மத்திய பிரதேசத்துல எவனானா ஒரு எம்.எல்.ஏ., எம்.பி.க்கு மக்கள் செல்வாக்கு இருக்குன்னு நினைக்கறீங்க? சான்சே இல்ல... தலையெழுத்தேன்னு ஓட்டு போடுறான். அந்தம்மா யாரு அது... ஆங், மேதா பட்கர்... அவங்க பின்னாடி எத்தினி பேரு கூட்டம் கூட்டமா போறாங்க பாருங்க. இன்னாத்துக்காக அந்தம்மா அடிக்கடி உண்ணாவிரதம் இருக்கணும்? சொல்லுங்க பாக்கலாம்? காந்தி ஃபார்முலா தலைவரே... என்னிக்கானாலும் ஃபெய்லியர் ஆவாத மேட்டர் அது. மக்களுக்காக நிக்கறேன்னு தெரிஞ்சா தான் அவன் நம்மள நம்புவான். ஓட்டுக்காக வரேன்னு தெரிஞ்சா முடிஞ்ச வரைக்கும் கறந்துக்கிட்டு அனுப்பிரலாம்னுதான் பாப்பான்."

வட்டத்துக்குப் புல்லரித்துப் போய் விட்டது. சாதாரண குப்பத்துவாசி. டெய்லராகப் பிழைப்பு நடத்துபவன். ஆனாலும் தவறாமல் தினத்தந்தி படிக்கிறான் போலிருக்கிறது. மேதா பட்கர்... ஆங், தெரிந்த பெயர்தான். என்னமோ கேட்டுப் போராடிக் கொண்டிருக்கிறார் இல்லை?

"அதான் அந்த டேம் மேட்டரு தலைவரே. குஜராத்து, மத்தியப்பிரதேசம் நடுவால நர்மதா நதிமேல கட்றதா சொன்னாங்களே... சர்தார் பட்டேலோ என்னமோ.."

அடச்சே, சர்தார் சரோவர். ஞாபகம் வந்துவிட்டது. என்ன அவஸ்தை இது. ஒரு தொண்டனின் உலக ஞானம் கூடத் தலைவருக்கு இல்லாமல் இருந்தால் பிறகு எப்படித்தான் பார்லிமெண்டுக்குப் போவது? தினசரி படிக்கும் தினந்தந்தியில் சினிமா பக்கங்களிலேயே புத்தி நிற்கிறது. மாற்றிக் கொள்ள வேண்டும்.

"**வா**ங்க, வாங்க தலைவரே... என்னாது இது சொல்லாம கொள்ளாம? ஒரு வார்த்த சொல்லிவுட்டிங்கன்னா, நா வந்திருக்க மாட்டனா?" பதறிக்கொண்டு வந்து நின்றான் முத்துராமன்.

"எத்தனுக்கு எத்தன் இருப்பான்ங்கறது ரொம்ப வாஸ்தவமான பேச்சு!"

"என்ன சொல்றீங்க?"

"எங்க கட்சி அலுவலகத்திலேயே திருட்டு நடந்திருக்கிறதே!"

- அனன்யா





"ஸ்வீட் ஸ்டாலில் விஜய் வேலை செய்யற மாதிரி படம் எடுத்தா என்ன பெயர் வைப்பாங்க சொல்லு?"

"ஜாங்கிரி!"

- எம். அசோக்ராஜா

வட்டம் புன்னகை செய்தார். வண்டியிலிருந்து தையல் மிஷின் இறக்கப்பட்டது.

"வெச்சிக்க முத்துராமா... ஒனக்குத்தான்."

கூட்டம் கூடிவிட்டது. வீதியில் நாற்கலி போடப்பட்டு தலைவர் உட்கார வைக்கப்பட்டார்.

"பாத்துக்கங்கடா... ஊரு ஒலகத்துல, தேர்தல் இல்லாத காலத்துல எந்தத் தலைவரு இப்படி நம்மளயெல்லாம் பாக்க வருவாரு? இந்த நெனப்பு எல்லார் மனசுலயும் எப்பவும் இருக்கணும்" என்றான் முத்துராமன். தலைவர் புன்னகை செய்தார். முத்துராமனின் அம்மா அவருக்குக் காபித்தண்ணி எடுத்து வந்து கொடுத்தாள். அவனது தந்தை தள்ளாடி எழுந்து வந்து வணக்கம் சொன்னார்.

"நல்லா இருக்கீங்களா?"

"ஐயா... நீங்க உக்காருங்க... நீங்க ஏன் எழுந்து வரணும்? நான் வரமாட்டனா?" என்று வட்டம் நம்ப முடியாத அடக்கம் காட்டிப் புல்லரிக்கச் செய்தார்.

"முடியலங்க... சக்கர நோய்ன்னாங்க. அது என்னாவோ, என்ன எளவோ... காலு ரெண்டும் வீங்கிக்கினு எளுந்து நடமாட முடியாம போயிடுச்சு. என்னிக்கிப் போய் சேரப்போறனோ..."

"அதெல்லாம் ஒண்ணுமில்ல... டேய் வடிவேலு... ஐயா யாரு தெரியும்ல? நம்ம கட்சிக்காக அந்தக் காலத்துல மாடா உழைச்சவரு... நானெல்லாம் அரசியல் படிச்சதே இவங்ககிட்டல்லாம்தான்..." சம்பந்தமில்லாமல் பேசிக் கொண்டிருந்தார்கள் கொஞ்ச நேரம்.

முத்துராமன்தான் விஷயத்தை ஆரம்பித்தான். வட்டச் செயலாளர் வந்திருக்கும் விஷயம். கொசு ஒழிப்பு. யாரும் சிரிக்காதீர்கள். மிகப்பெரிய பிரச்னை அல்லவா அது? காலம் காலமாகப் பேட்டைவாசிகளை எத்தனை பாடு படுத்தி வந்திருக்கிறது! அறுபதுகளிலும் எழுபதுகளிலும் எத்தனை நூறு பேருக்கு இங்கே யானைக்கால் நோய் இருந்தது!

"மருந்து அடிக்கப் போறாங்களாமா?" என்றான் கூட்டத்தில் ஒருவன்.

முத்துராமன் திரும்பிப் பார்த்தான்.

"ஆமா தல... மருந்தடிப்பாங்க; மத்ததும் செய்வாங்க... மூணு மாசம் டயம். நம்ம பேட்டையத் தலைவரு கவிட்சர்லாந்து மாதிரி மாத்தி காட்டப் போறாரு பாருங்க.. டேய், நம்ம பேட்டையைத் தலைவரு தத்தெடுத்திருக்காருடா... சொந்தக் காசுல அத்தினியும் பண்ணப் போறாரு..."

'ஓ'வென்று சந்தோஷக் கூக்குரலிட்டது கூட்டம்.

அவரைப் பொருத்த அளவில் அது வாழ்வா, சாவா பிரச்னை. இதுதான். இது ஒன்றுதான் இறுதி முயற்சி. இங்கே தொடங்குகிற ஓட்டம் பாராளுமன்றத்தில் தான் போய் முடிய வேண்டும். சாதனை செய்க பராசக்தி. துணிந்து, எழுந்து அந்தக் குப்பத்தின் கொசுத் தொல்லையை ஒழிப்பதற்காகவும் இதர நலப்பணிகளுக்காகவும் பதினைந்து லட்ச ரூபாய் செலவிட விருப்பதாக அறிவித்தார்.

கூட்டம் ஜோராகக் கைதட்டியது.

(தொடரும்)


படம் : பொன்னாச்சி சுந்தரம்

# அம்பேலாகும் இருபது!

விஜயகாந்த் வீட்டில் நடந்த வருமான வரிச் சோதனையைத் தொடர்ந்து அவருக்குக் கிடைத்த விளம்பரம் ஜெயலலிதாவை மிகவும் கடுப்படைய வைத்துவிட்டதாம். எனவேதான் அவரை விமர்சித்துப் பெரிய அறிக்கை விட்டாராம். "சட்டமன்றத் தேர்தலுக்கு முன்னால் போலீஸ் அதிகாரி சிவனாண்டி மூலம் பேச்சுவார்த்தை நடத்தி அவருடன் கூட்டு வைக்க முயன்றார் ஜெ.. அது நடக்கவில்லை. இப்போது மாவட்ட அளவில் பல முக்கியப் பிரமுகர்கள் தே.மு.தி.க.வில் இணைந்து கொண்டிருக்கிறார்கள். எங்கள் தலைவிக்கு இந்தக் கடுப்பு வேறு. இதையெல்லாம் விடுத்து தமிழகமெங்கும் சுற்றுப்பயணம் செய்து கட்சியை நிலைப்படுத்திக் கொள்ளும் ஆக்கபூர்வமான செயலில் புரட்சித் தலைவி இறங்க வேண்டும். தவறினால், கட்சி இன்னமும் கரைந்துதான் போகும்" என்கிறார் நம்மிடம் மூத்த அ.தி.மு.க. தலைவர்.

மைனாரிட்டி அரசு என்று விமர்சித்து வரும் ஜெயலலிதாவை வாயடைக்கச் செய்யும் வகையில், அ.தி.மு.க.விலிருந்தே கணிசமான எம்.எல்.ஏ.க்களைத் தங்கள் பக்கம் இழுக்க தி.மு.க. முழு முயற்சியில் இறங்கிவிட்டதாம். சேடப்பட்டி முத்தையா, கருப்பசாமி பாண்டியன், மத்திய இணை அமைச்சர் ரகுபதி, ராஜ கண்ணப்பன் ஆகியோருக்கு இந்த அஸைன்மெண்ட் கொடுக்கப்பட்டிருக்கிறதாம். 'இருபது அ.தி.மு.க. எம்.எல்.ஏ.க்கள் தி.மு.க.வுக்கு வரத் தயாராக இருக்கிறார்கள்' என்று சேடப்பட்டி சமீபத்தில் வெளிப்படையாகவே மேடையில் பேசியிருக்கிறார்.

முன்னாள் அ.தி.மு.க. அமைச்சர் மருங்காபுரி பொன்னுசாமி இல்லத் திருமணத்தை நடத்தி வைக்க விஜயகாந்த் சென்றிருந்தார். 'ஊழல் வழக்கில் மூன்றாண்டுகள் சிறை தண்டனை அனுபவித்து வெளியே வந்தவர் பொன்னுசாமி. 'ஊழலை ஒழிப்பேன்' என்று இயக்கத்தைத் துவங்கிய விஜயகாந்த் பொன்னுசாமி மற்றும் முன்னாள் அதி.மு.க. அமைச்சர் சுபகிருஷ்ணன் போன்றோருக்குக் கட்சியில் முக்கியத்துவம் கொடுத்து வருகிறார். இந்த நிலையில் தி.மு.க.வையும் அ.தி.மு.க.வையும் விமர்சனம் செய்யும் தகுதியை இழந்து வருகிறோம்' என்று நம்மிடம் வருத்தப்பட்டார் தே.மு.தி.க. பிரமுகர் ஒருவர்.

**- சஞ்சயன்**





சோ எழுதிய

# ஹிந்து மஹா சமுத்திரம்

வேதங்கள், உபநிஷத்துக்கள், வேதாந்தம், சாத்திரம், புராணங்கள், ஆலயங்கள், பக்தி, சரித்திரம், நீதி, சட்டம், சமூக சிந்தனை, விஞ்ஞானம், கணிதம், இலக்கியம், வான சாத்திரம் என்று விரிந்து... ஆழ்ந்து, அகன்ற இந்த சமுத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவரின் பிரமிப்பு!

முதல் பாகம் விலை. ரூ.175/-

## மஹாபாரதம் பேசுகிறது

பாரதக் கதை பழமை வாய்ந்தது. ஆனால் அதை எழுதியிருக்கும் விதம் மிகவும் புதுமையானது. 1304 பக்கங்களில்; வியாச பாரதத்தின் சுருக்கம்; 18 பர்வங்களில் வரும் முக்கிய நிகழ்ச்சிகள்; பாரதக் கதை நடந்திருக்கக்கூடும் என்பதற்கான வழக்கறிஞர் 'சோ'வின் ஆணித்தரமான வாதம்; பலரும் கேட்டிராத நுணுக்கமான அரிய தகவல்களை விளக்கி; முக்கிய இடங்களில் பாரத நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங்களையும் விமர்சித்து, இன்றைய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறியிருக்கும் விதம் புதுமையானது.

இரண்டு பாகங்கள் - விலை ரூ.600/-

## வால்மீகி ராமாயணம்

வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட ராமாயணம் எனும் இதிஹாசத்தை - சுருக்கமாகவும், மிகவும் எளிய நடையிலும் சோ அவர்கள் எழுதியுள்ளார். மேலும் சில முக்கியமான இடங்களில் வால்மீகி ராமாயணம் - கம்ப ராமாயணம் மற்றும் துளசிதாஸரின் ராமாயணங்களை விட எப்படி வேறுபட்டுள்ளது என்பதையும், அப்படி விளக்கும் போது ஆங்காங்கே கம்பரின் வாக்கியத்திலுள்ள தமிழ் அழகையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

விலை ரூ.500/-

## இந்து தர்மம்

காஞ்சி காமகோடி பூஜ்ய ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் அருளுரைகளின் சுருக்கம்.

விலை ரூ.60/-

## அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்

ராஜாஜி, மொரார்ஜி தேசாய், இந்திரா காந்தி, சந்திரசேகர், அத்வானி, காமராஜ், அண்ணாதுரை, எம்.ஜி.ஆர், கருணாநிதி, என்.டி.ஆர்., ஜெயலலிதா போன்ற ஏராளமான அரசியல் தலைவர்கள், மற்றும் சினிமா, பத்திரிகைப் பிரமுகர்களுடன் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை விளக்கியுள்ளார் விலை ரூ.90/-

## கருத்தாழம் மிக்க நகைச்சுவை நூல்கள்

| | |
|---|---|
| 1. வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 35.00 |
| 2. இந்து தர்மம் | 65.00 |
| 3. வந்தே மாதரம் | 115.00 |
| 4. வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 |
| 5. சர்க்கார் புகுந்த வீடு | 100.00 |
| 6. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 |
| 7. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 45.00 |
| 8. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 27.00 |
| 9. துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 |
| 10. அதிகப் பிரசங்கம் | 32.00 |
| 11. இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | |
| 12. யாரோ இவர் யாரோ? | 65.00 |
| 13. சாதல் இல்லையேல் காதல் | 80.00 |
| 14. மைடியர் பிரம்ம தேவா | 30.00 |
| 15. இந்தியா எங்கே போகிறது? | 20.00 |
| 16. துக்ளக் கேள்வி - பதில் பாகம் 1 | 24.00 |
| 17. துக்ளக் கேள்வி - பதில் பாகம் 2 | 45.00 |
| 18. ஒண்ணரை பக்க நாளேடு பாகம் 1 | 40.00 |
| 19. காமராஜை சந்தித்தேன் | 60.00 |
| 20. புரட்சி கீதை | 35.00 |
| 21. திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 |
| 22. யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 23. சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 24. எங்கே போகிறாய்? | 40.00 |
| 25. என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 26. இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 27. இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 28. சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 29. சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 30. ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 31. நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 32. மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 33. ஏன் கூடாது? | 40.00 |
| 34. இரவில் சென்னை | 40.00 |
| 35. முகமது பின் துக்ளக் | 35.00 |
| 36. உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 37. சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 38. எதற்காக? | 35.00 |
| 39. உண்மையே உன் விலை என்ன? | 37.00 |

| | | | |
|---|---|---|---|
| 1. ஸ்மைல் ப்ளீஸ் | - | சத்யா | ரூ. 40.00 |
| 2. அரசியல் கலையை அறிந்து கொள்வோம் | - | " | ரூ. 40.00 |
| 3. நையாண்டிக் கட்டுரைகள் | - | " | ரூ. 40.00 |
| 4. அரசியலும் நகைச்சுவையும் | - | " | ரூ. 32.00 |
| 5. நாடு தழுவிய நகைச்சுவை | - | " | ரூ. 50.00 |
| 6. மாடசாமியின் மனசாட்சி | - | " | ரூ.100.00 |




(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,

தபால்பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,

சென்னை - 4. தொலைபேசி : 24641314

e-mail : www.alliancebook.com

visit us at: Srinivasan@alliancebook.com



* தமிழ்ச்செல்வன்

# தேனீ வளர்த்து...

இயற்கை விவசாயி தமிழ்ச்செல்வனுக்கு உலகமே அவரது மனைவியும் மூன்று குழந்தைகளும்தான். அவர்களுக்கு ஒன்றென்றால் மனிதர் துடித்துவிடுவார். சோதனையாக அவர்களுக்கு அடுத்தடுத்து உடல்நலம் குன்றிப் போக, நொந்துபோன தமிழ்ச்செல்வன், மருத்துவரை நாடியிருக்கிறார். தொடர் வைத்தியம் பார்த்த டாக்டர்,

"இந்த நால்வருக்குமே உடலில் நோய் எதிர்ப்பு சக்தி மிகக் குறைவாக இருக்கிறது. மருந்து மாத்திரைகள் வாயிலாக அதனை நிவர்த்தி செய்வதைவிட, தினசரி அவர்களுக்குச் சுத்தமான தேன் புகட்டினால் நலமாக இருக்கும்!" என்றிருக்கிறார்.

"கடைகளிலிருந்து தேனினை விலைக்கு வாங்கித் தர என் மனம் ஒப்பவில்லை. நாமே சுயமாக தேனீக்கள் வளர்த்து, தேன் சேகரித்தால் என்னவென்று தோன்றியது. கடந்த ஐந்து வருடங்களாகத் தேனீக்கள் வளர்ப்பு, தேன் சேகரிப்பாளராகச் செயல்பட்டு வருகிறேன். இந்த ஐந்தாண்டுகளில் என் மனைவி மற்றும் பிள்ளைகளின் மருத்துவச் செலவு வெகுவாகக் குறைந்துள்ளது!" என்கிறார் தமிழ்ச்செல்வன். புதுக்கோட்டை அருகில் இருக்கும் அணைவயல் கிராமத்தைச் சேர்ந்தவர் இவர்.

**கா**டுகளில் காணப்படுவது கொம்புத் தேனீ மற்றும் மலைத்தேனீ. இவற்றை யாரும் வளர்க்க முடியாது. தேன் உற்பத்தியும் குறைவு. நம்மால் வளர்க்கப்படக் கூடியவை இரு வகைத் தேனீக்கள்தான். கொசுத் தேனீ எனப்படும் பானைத் தேனீ மற்றும் இந்தியன் தேனீ எனப்படும் பெட்டித் தேனீ.




* பானைத் தேனீ வளர்ப்பு

பானைத் தேனீக்கள் மிகச் சிறியவையாக இருக்கும். இவற்றை எதிரிகள் அதிகம் தாக்குவது இல்லை. பானைகளில் அடைத்து வளர்க்கப்படும். எவரையும் கொட்டுவதும் இல்லை. எனவே பயமின்றி வீட்டுத் தோட்டங்களி

லும், காய்கறித் தோட்டங்களிலும் வளர்க்கலாம். இந்தத் தேனீக்கள் தும்பை முதல் துளசி வரை மகரந்தமும் மதுரமும் சேகரித்து, தேன் உற்பத்திச் செய்கின்றன. இந்தத் தேன் மிகுந்த மருத்துவ குணம் கொண்டது. இந்தத் தேனுக்குக் கூடுதல் விலை கிடைக்கும்.


* தேனீ கூட்டத்தைப் பெட்டிக்குள் அடைத்தல்...

# தேகம் பெறு!

இந்தியன் தேனீயைத் தென்னந் தோப்பு, வாழைக் கொல்லை, பருத்திக் காடு, நெல்லி, முந்திரி, முருங்கை மற்றும் தைல மரத் தோப்புகளில் பெட்டிகளில் வைத்து வளர்க்கலாம்.

"ஓர் ஏக்கர் தோப்பில் ஆறு இடங்களில் பெட்டிகள் வைக்கலாம். பெட்டித் தேனீக்கள் சுமார் இரண்டு கி.மீ. தூரம் வரை சென்றுவிட்டு, பெட்டிக்கே திரும்ப வந்து சேர்ந்துவிடும். ஒரு பெட்டியிலிருந்து வருடத்துக்கு ஐந்து லிட்டர் வரை தேன் கிடைக்கும். அறுவடைக் காலம் வருடத்தில் இரண்டு முறை. தை - மார்கழி ஒரு பருவம், ஆனி - ஆடி இன்னொரு பருவம். இந்தத் தேனில் இருவகை உற்பத்தி உண்டு. ஒன்று பூவழித் தேன். சர்க்கரை நோய் உள்ளவர்கள் இதனை உண்ணக் கூடாது. இன்னொன்று இலை வழித் தேன். இதனை சர்க்கரை நோய் உள்ளவர்களும் உண்ணலாம். இதைப் போன்ற இயற்கைத் தேன், பல வருடங்கள் ஆனாலும் கெட்டுப் போவதில்லை!" என்று கூறும் தமிழ்ச்செல்வன், தேனீக்கள் வளர்ப்புப் பயிற்சியாளராக இருப்பதோடு கூட தேனீக்கள் குறித்துப் பல ஆய்வுகள் செய்து, தேனீ பூச்சியில் வல்லுநராகவும் செயல்பட்டு வருகிறார். தேனீ பூச்சி வளர்ப்பு குறித்தும், தேன் அறுவடை குறித்தும் இவரது தோட்டத்தில் பயிற்சியளிக்கப்படுகிறது.

* தேனீ வளர்ப்புப் பயிற்சி...


"வேளாண் மகசூல் அதிகரிக்க தேனீக்கள் பெரும் தொண்டு புரிகின்றன. இரத்த சோகை, கண் பார்வைக் குறைபாடு போன்றவற்றுக்குத் தேன் கண் கண்ட மருந்து. ஒருவர் தினசரி ஐந்து கிராம் அளவு தேன் சாப்பிட்டு வந்தால் போதும். உடலில் நோய் எதிர்ப்புச் சக்தி அதிகரித்துவிடும். பித்தத்தைக் குறைக்கும் சக்தியும் இதற்கு உண்டு" என்று கூறும் தமிழ்ச்செல்வன்,

"பெட்டித் தேனீ வளர்ப்புக்குப் பெட்டி மற்றும் தேனீக்கள் உட்பட ஆயிரம் ரூபாயும், பானைத் தேனீ வளர்ப்புக்குப் பானை மற்றும் தேனீக்கள் உட்பட முன்னூற்றைம்பது ரூபாயும் செலவாகும்" என்கிறார்.

செய்திச் சித்திரம் : ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

• சம்பத்கரீ




# பாலாவில்

**அ**ம்பாளின் இரண்டு மேல் திருக் கரங்களிலிருந்தும் இரண்டு படைகள் வந்தாயிற்று. அங்குசத்திலிருந்து யானைப் படை - அதனை சம்பத்கரீ நடத்துகிறாள். பாசக்கயிற்றிலிருந்து குதிரைப்படை - அதனை அசுவாரூடா என்கிற தேவதை தலைமையேற்று இயக்குகிறாள்.

மற்ற இரு கரங்களுள் ஒன்றில் இக்ஷுகோதண்டம் என்கிற கரும்பு வில்; மற்றதில் பஞ்ச பாணங்கள் உள்ளன அல்லவா? அந்த இரு கரங்களிலிருந்தும் இன்னும் இரண்டு பேர் வரவேண்டுமே - அவர்கள் யார்...?

அம்பாள் சாதாரணமாகப் போருக்கு வருகிறபோது ரதத்தில் ஏறி வருகிறாள் என்பது ஐதீகம். என்ன ரதம் என்றால் சக்ரராஜரதம். ரொம்ப அழகான சக்க ரங்களையுடைய ரதம்; எல்லா ஆயுதங் களையும் வைத்திருக்கக் கூடிய ரதம் இந்த சக்ரராஜ ரதம். இதைக் குறிக்கும் திருநாமமாக வருவதுதான் **சக்ரராஜ ரதாரூட ஸர்வாயுதபரிஷ்க்ருதா** - இப்படி அம்பாள் ஆரோகணித்து வருகிறபோது, கூடவே இன்னும் இரண்டு ரதங்கள் வருகின்றன.

அவற்றுள் ஒரு ரதத்துக்கு கேய சக்ர ரதம் என்று பெயர். இன்னொரு ரதத்துக்கு கிரிசக்ர ரதம் என்று பெயர்.

## மந்த்ரிணி, வாராஹி

கேய சக்ர ரதத்தில் வரக் கூடியவள் மந்த்ரிணி. கிரி சக்ர ரதத்தில் வரக்கூடி யவள் வாராஹி என்று அழைக்கப்படக் கூடியவள்.

**கேயசக்ர ரதாரூட மந்த்ரிணி பரிஸேவிதா** என்று திருநாமம். கேய சக்ர ரதத்தில் வரக்கூடிய மந்த்ரிணி, தன்னு டைய பரிவாரங்களோடு அம்பாளை வணங்குகிறாள்.

இன்னொரு ரதம் கிரிசக்ர ரதம் - **கிரிசக்ர ரதாரூட தண்டநாதா புரஸ்க்ருதா** என்பது திருநாமம். தண்ட நாதாவாக இருக்கக் கூடியவள் கிரிசக்ர

**சுதா சேஷய்யன்**

# வீரம்!

ரதத்திலே வருகிறாள். அவளும் அம்பாளை ஸேவிக்கிறாள்.

இந்த மந்த்ரிணியும் தண்டநாதாவும் யார்?

மந்த்ரிணி, அம்பாளுடைய ராஜ்யத்தை முழுவதுமாகப் பரிபாலனம் செய்யக் கூடியவள். பின்னாலே ஒரு திருநாமம் வரும்- 'மந்த்ரிணியஸ்த ராஜ்யதா' என்று. மந்த்ரிணியிடம் "இதைப் பார்த்துக் கொள்" என்று சொல்லி முழுக்க முழுக்க ராஜ்யத்தைக் கொடுத்துவிட்டாளாம் அம்பாள். அந்த மந்த்ரிணி தன் பரிவாரங்களோடு வந்து ஸேவிக்கிறாள்.

இன்னொருத்தி தண்டநாதா! தண்டம் என்றாலே சைன்யம் என்று பொருள். சைன்யங்களுக்கெல்லாம் தலைவியாக இருக்கக்கூடியவள் தண்ட நாதா.

ஆக, ஒரு ராஜ்யதாயினி, ஒரு சேனாதிபதி இருவரும் இரு வேறு ரதங்களில் ஏறி வருகிறார்கள். எங்கேயிருந்து இந்த இரண்டு பேரும் வந்தார்கள்?

மந்த்ரிணியானவள் இக்ஷுகோதண்டத்திலிருந்து வந்தவள். தண்டநாதா, பஞ்சபாணங்களிலிருந்து வந்தாள் - பஞ்சதன்மாத்ர ஸாயகா என்ற திருநாமம் ஆரம்பத்தில் வந்ததல்லவா..? அந்தப் பஞ்சதன்மாத்ரைகளின் அடையாளமான பஞ்ச பாணங்களிலிருந்து வந்தவள் தண்டநாதா. 'வாராஹி' என்று இவளுக்கு இன்னொரு பெயர். வராக (பன்றி) முகத்தை உடையவள். அம்பாளுக்கு என்னவெல்லாம் தன்மைகள் உண்டோ, அவற்றையெல்லாம் வாராஹிக்கும் அவள் கொடுத்து வைத்திருப்பதாக ஐதீகம். தன்னுடைய அனுக்ரஹ பலத்தை அவள் வாராஹிக்குக் கொடுத்து வைத்திருந்தாள். அதே மாதிரி துன்பங்களைத் துடைக்கக் கூடிய ஆற்றலையும் தவறுகளைத் தண்டிக்கக்கூடிய ஆற்றலையும் நன்மை செய்தவர்களுக்கு அனுக்கிரஹிக்கக்கூடிய ஒரு குணத்தையும் அவள் வாராஹிக்குக் கொடுத்து வைத்திருந்தாள். துஷ்ட நிக்ரஹம்; சிஷ்ட பரிபாலனம் - இரண்டுமே வாராஹிக்கு உண்டு. கிட்டத்தட்ட அம்பாள் மாதிரியே வாராஹியைப் பார்க்கக் கூடிய முறை வழக்கத்தில் இருக்கிறது. சில கோயில்களில் வாராஹியை வணங்கிவிட்டு அம்பாளை வணங்கும் வழக்கம் கூட ஏற்பட்டிருக்



• அசுவாரூடா

கிறது! இவ்வாறு அம்பாளுக்கு அடுத்த நிலையில் இருக்கக்கூடியவள் வாராஹி.

## மூன்று ரதங்கள்

கிரிசக்ர ரதத்தில் தண்டநாதா வருகிறாளே, கிரி என்றால் என்ன அர்த்தம்? கிரி என்றால் மலை என்று ஓர் அர்த்தம். ஆனால் இங்கே 'கிரி' என்பது மலையைக் குறிக்கவில்லை. கிரி என்பது சில சமயங்களில் குதிரைகளைக் குறிக்கும். கிரி என்பது புலன்களுக்கும் ஒரு பெயர். (புலன்களாகிய குதிரைகள் என்பதாலும் இது அமைந்திருக்கலாம்). இந்த கிரி சக்ர ரதத்தில் வருகிற தண்டநாயகா, அம்பாளுடைய பஞ்சபாணங்களிலிருந்து வந்து உதித்தாள்.

அம்பாளுடைய சக்ர ராஜ ரதம், கேய சக்ர ரதம், கிரி சக்ர ரதம் - இந்த மூன்றும் ஒன்றாக இருக்கின்றன என்பது ஐதீகம். போருக்கு வரும்போதெல்லாம் இவை மூன்றும் சேர்ந்தே வரும். ரத த்ரயம் (மூன்று) என்று இவற்றுக்குப் பெயர்.

இவ்வாறு மந்த்ரிணியும் தண்டநாதாவும் பக்கத்திலிருக்க, பண்டாஸுரனை வதம் செய்யக்கூடியவளாக இருக்கிறாள் அம்பாள்.

## பண்ட புத்திரர்கள்

இப்படி ரதங்களில் ஆரோகணித்துச் சென்று வதம் முடியும் வரை, இடையிலே என்னவெல்லாம் நடக்கின்றன என்பதை 84ஆவது திருநாமம் வரையில் பார்க்க முடியும்.

**பண்டபுத்ரவதோ யுக்த பாலா விக்ரம நந்திதா** என்று ஒரு திருநாமம் உண்டு.

பாலா என்பவளுடைய வீரத்தைப் பார்த்து அம்பாள் அப்படி சந்தோஷமடைகிறாளாம்.

இந்த பாலா யார் என்றால், பண்ட புத்திரர்களான பண்டாஸுரனின் மகன்களை வதம் செய்தவள்.

இந்த பாலாவினுடைய 'விக்ரம' தன்மை அம்பாளுக்கு மகிழ்ச்சியை ஊட்டுகிறது.

விக்ரம என்றாலே வீரம் என்று பொருள். அதனால் தான் விக்ரமாதித்தன் என்று பெயர். வீரத்தை ஆளக் கூடிய சூரியனாக இருந்தவன் விக்ரமாதித்தன்.

பாலாவின் விக்ர மத்தைப் பார்த்து அம்பாள் மகிழ்ச்சி அடைகிறாள் என்றால் அந்த பாலா யார்?

அம்பாளுடைய ஒன்பது வயது மகளுக்குத்தான் பாலா என்கிற திருநாமம். பாலா திரிபுரசுந்தரி என்று இவளைத் தான் சொல்லுவது. இந்த ஒன்பது வயது பாலா, யுத்தத்துக்கு வருகிறாளே என்கிற போது அம்பாளுக்கு எப்படி இருந்ததாம்?...

'ஐயோ இந்தச் சிறுகுழந்தை சண்டைக்குப் போகிறேன் என்கிறதே... அதுவும் சாதாரண சண்டை அல்ல. பண்டாஸுரன் மாயாஜாலமாகச் சண்டை போடுகிறான் என்பதை எண்ணுகிற போது, பாலா தான் போய்த்தான் தீருவேன் என்கிறாள்; கிளம்பிப் போகிறாள்.

அம்பாள் கவலையுடன் உட்கார்ந்திருந்தபோது மந்த்ரிணியும் தண்டநாதாவும் போர்க்களத்திலிருந்து வந்தார்களாம்.

அன்று அம்பாள் சண்டைக்குப் போகவில்லை. யுத்தத்தின் முதல் நாள் அம்பாள் போர்க்களத்துக்குப் போகவில்லை - லலிதோ பாக்கியானமும் தேவி மஹாத்மியமும் சொல்லக் கூடிய கதை இதுதான் - அதைச் சுருக்கமாகப் பார்ப்போம்:

பண்டாஸுரனுடன் சண்டை தொடங்கியது... அது தொடங்கியவுடன் அம்பாள் நேரடியாகச் சண்டைக் குப் போகவில்லை அவ்வாறு போவ



• மந்த்ரிணி

அவசியமில்லை. எப்போதுமே, தலைவர்கள் கடைசியில்தான் மோதுவார்கள்; முதலில் தொண்டர்கள்தான் மோதுவார்கள். ஆகவே, பண்டாஸுரனுடைய ஸைன்யத்தினரும் அம்பாளுடைய பலவிதமான சக்திகளும்தான் முதலில் சண்டைக்குப் போனார்கள்.


• வாராஹி

## தூக்கமும் மயக்கமும்!

சண்டை, தொடர்ந்து உக்கிரமாக நடந்தது. இதை லலிதோபாக்யானம் சொல்வதைவிட தேவி மஹாத்மியம் கொஞ்சம் கூடுதலாகச் சொல்லும் - என்ன மாதிரி அஸ்திரங்கள் முதலில் வந்தன என்றால், முதலில் 'மந்திரம்' வந்தது; அப்புறம் தந்திரம் வந்தது; அதற்கப்புறம் தூக்கம் வந்தது, மயக்கம் வந்தது.

தூக்கம் என்ற அஸ்திரம் வந்தாலும் தூக்கமே வந்தாலும் ஒரே விளைவுதான்! மயக்கம் என்ற அஸ்திரமும் அப்படியே! அது அங்கிருந்து வந்ததும் இங்கேயிருந்து போன சக்திகள் சிலர் இந்தத் தூக்கத்திலும் மயக்கத்திலும் கட்டுண்டு விழுந்தார்கள். அவர்களை எழுப்புவிக்கிற பணியும் அம்பாளுக்கு வந்தது.

இந்தத் தூக்கம், மயக்கத்தையெல்லாம் தாண்டி இரண்டு பேர் நின்றார்கள். மற்ற எல்லோரும் விழுந்த பிறகும் நின்ற இவர்கள் யார் என்றால் மந்த்ரிணியும் வாராஹியும்தான்!

பண்டாஸுரன் இதற்கப்புறம் தனது ஸேனாதிபதிகளை அனுப்பினான். அவர்களெல்லாம் வீழ்த்தப்பட்டனர். அவர்கள் விழுந்த பிறகு தனது சொந்த புத்திரர்களை - முப்பது புத்திரர்களை - அனுப்பினான். இந்த முப்பது புத்திரர்கள் என்றைக்குச் சண்டைக்கு வந்தார்களோ, அன்றைக்குத்தான் ஒன்பது வயது சிறுமியான பாலா திரிபுரசுந்தரி, "அம்மா நான் போகிறேன்- யுத்தத்துக்கு!" என்று புறப்படுகிறாள்!

(தொடரும்)

'ஜனநாயகப் படுகொலை' - கடந்த அக்டோபரில் சென்னை மாநகராட்சி வார்டுகளுக்கு நடந்த தேர்தலை இப்படித்தான் விமர்சித்தது தமிழக மார்க்ஸிஸ்ட் கட்சி. தேர்தல் விவகாரம் நீதிமன்றத்துக்குச் சென்று ஏற்பட்ட



★ படம்: ராஜேஷ்

அதிரடி திருப்பத்தின் காரணமாக 99 வார்டுகளுக்கு மீண்டும் தேர்தல் நடத்த உத்தரவிட்டிருக்கிறது தி.மு.க. அரசு. இந்தச் சூழலில் மார்க்ஸிஸ்ட் கட்சியின் மனநிலையை அறிய அதன் மத்திய கமிட்டி உறுப்பினரான டி.கே.ரங்கராஜனைச் சந்தித்தோம்...

**தி.மு.க. அரசு 99 வார்டுகளுக்கு மறு தேர்தல் நடத்தவிருப்பது குறித்து...?**

"நாங்கள் போட்டியிட்ட எட்டு வார்டுகளில் மறு தேர்தல் நடத்த வேண்டுமென்றோம். நீதிபதி சொன்னதில், நாங்கள் கேட்ட எட்டும் இருப்பதால் இதனை வரவேற்கிறோம். இரண்டு நீதிபதிகள் பிளவுபட்டு கருத்து சொன்ன நிலையில் மூன்றாவது நீதிபதியின் கருத்துக்குக்கூட காத்திராமல், மீண்டும் 99 வார்டுகளுக்குத் தேர்தல் நடத்த முதல்வர் ஆணையிட்டதும் வரவேற்கக் கூடியதே."

**விவகாரம் நீதிமன்றத்தில் நிலுவையில் இருக்கும்போது இந்த நடவடிக்கை சரிதானா?**

"சட்டத்தின் மூலை முடுக்குகளில் நுழைந்து காலத்தைக் கடத்தாமல் மக்கள் மன்றத்தையே மீண்டும் நாடியிருப்பது நல்வழிதான். இன்னும் சொல்லப் போனால் நீதிமன்றமே கூட பாராட்டும் ஒரு நிலைதான் இது."

**'தமிழக தேர்தல் கமிஷனர், போலீஸ் கமிஷனர் ஆகியோரை மாற்றி விட்டுத்தான் மாநகராட்சித் தேர்தலை நடத்த வேண்டும்' என்று ஜெயலலிதா சொல்கிறாரே!**

"இந்தக் கருத்தில் எங்களுக்கு உடன்பாடில்லை. தமது ஆட்சிக் காலத்தில் பல ஜனநாயக விரோதச் செயல்களில் ஈடுபட்டவருக்கு இவ்வாறு பேச எந்தத் தகுதியும் கிடையாது."

**வெளி மாநில அல்லது மத்திய போலீஸின் நேரடிப் பார்வையில் தேர்தலை நடத்த வற்புறுத்துவீர்களா?**

"அரசியலில் அனுபவம்தான் வாத்தியார். கடந்தமுறை பெற்ற அனுபவத்திலிருந்து பாடம் கற்றிருப்பார் கலைஞர். எனவே வரவிருக்கும் வார்டு தேர்தலில் மக்கள் தங்கள் ஜனநாயகக் கடமையை எந்தவிதத் தடங்கலும் இல்லாமல் நிறைவேற்றும் வகையில், தமிழக அரசு தகுந்த ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்."

**சென்ற முறை உங்களுக்குத் தி.மு.க.வோடு சென்னையில் தொகுதி**

உடன்பாடு ஏற்படவில்லை. இந்தமுறை அதற்கான வாய்ப்பு உண்டா?''

''தி.மு.க.வோடு உறவு தொடர்கிறது. ஆனால் இந்தமுறை தொகுதி உடன்பாடு உண்டா, இல்லையா என்பதை கட்சி முடிவு செய்யும். ராஜினாமா செய்த தி.மு.க., பா.ம.க., காங்கிரஸ் உறுப்பினர்கள் அதே வார்டுகளில் மீண்டும் போட்டியிடுவார்கள் என்ற அறிவிப்பு வந்திருப்பதும் கவனிக்கத் தக்கது.''

**தமிழக அரசில் காங்கிரஸும் அதிகாரத்தைப் பகிர்ந்து கொண்டால், கலைஞர் அரசுக்கு ஸ்திரத் தன்மை கூடுமே!**

''இப்போதிருக்கும் நிலையிலேயே தொடர்ந்து ஐந்து வருடங்களை கலைஞர் முடிக்க வேண்டும் என்று நினைக்கிறோம். மத்தியில் நரசிம்மராவ் காங்கிரசுக்கு முழு மெஜாரிட்டி இல்லாத நிலையில், ஐந்து வருடங்கள் ஆட்சி செய்யவில்லையா?''

கொண்ட விஷயம் பேச்சுவார்த்தை மூலமே தீர்வு காண வேண்டும்.''

**சமீப காலங்களில் ஜக்கி வாசுதேவ், சாய்பாபா, அமிர்தானந்தமயி போன்ற ஆன்மிகப் பெரியோர்களைக் கலைஞர் சந்தித்தது சலசலப்பைக் கிளப்பியிருக்கிறதே!**

''அந்தக் காலத்தில் ஆன்மிகவாதிகள் மன்னர்களைச் சந்திப்பார்கள். இந்தக் காலத்தில் பிரதமரும், முதல்வரும்தான் 'மன்னர்கள்'. எனவே முதல்வரை ஆன்மிகவாதிகள் சந்திப்பதையும் மேடையைப் பகிர்ந்து கொள்வதையும் இயல்பாகவே எடுத்துக் கொள்ளலாம். அதன் காரணமாக கலைஞரின் கடவுள் மறுப்புக் கொள்கையில் தடுமாற்றம் ஏற்பட்டிருப்பதாகக் கருதக் கூடாது. கியூபாவின் காஸ்ட்ரோ போப் ஆண்டவரை வரவேற்று, உபசரித்ததும்,



# ''கலைஞர் கற்றுக்கொண்ட பாடம்!''

**முல்லைப் பெரியாறு பிரச்னையில் மீண்டும் பேச்சுவார்த்தை கிடையாது என்ற தமிழக அரசு சொல்லிவிட்டதே!**

''இரு மாநில மக்களின் உணர்வோடு, வாழ்வோடு தொடர்பு

பெரியார் - இராஜாஜி சந்திப்பும் வரலாற்றில் இடம் பெற்றிருக்கின்றன. இதன் காரணமாக சம்பந்தப்பட்டவர்கள் தங்கள் கொள்கைகளை விட்டு விட்டார்கள் என்று சொல்ல முடியுமா?''

**- ப்ரியன்**

**வா**ஸ்து மணி, வாஸ்து பொம்மை எல்லாம் போய் இன்று வாஸ்து மீன்கள் வந்து விட்டன. கஷ்டங்கள் தீர என்னவெல்லாமோ செய்த மக்கள், இப்போது இந்த மீன்களையும் வாங்கி வளர்க்கத் துவங்கி விட்டனர்.


• ரெட்லின்

அவர்களின் தேவையைப் பூர்த்தி செய்ய ஃப்ளவர் ஹார்ன், அரோனா, கோல்டன் ஃபிஷ்கள் சிங்கப்பூர், மலேஷியா விலிருந்தெல்லாம் இறக்குமதி செய்யப் படுகின்றன.

வாஸ்து மீன்களின் மீது மக்கள் வைக்கும் நம்பிக்கை, அவற்றின் வளர்ப்பு முறை பற்றி, சென்னை தி.நகரிலுள்ள டேனியல் அக்குவா சென்டரின் உரிமையாளர் ரெட்லினிடம் கேட்டோம்.

"வாஸ்து மீன்களை வீட்டில் வளர்த்தால் குடும்பத்தில் நன்மை அதிகரிக்கிறது என்பதால், விலையைப் பார்க்காமல் எல்லோரும் வாங்கிட்டுப் போறாங்க. இந்த மீன்களுள் நம்பர் ஒன் 'அரோனா'தான்! சிங்கப்பூரிலிருந்து இறக்குமதி செய்யப்படும் இந்த மீன், சில்வர் ரெட், க்ரீன், சில்லி ரெட்னு விதவிதமான வண்ணங்கள்ல கிடைக்குது.

மினிமம் ஆயிரம் ரூபாய்ல ஆரம்பிச்சு, இலட்சம் வரை விலை போகும். ஒரு தொட்டிக்குள் ஒரு மீனைத்தான் வளர்க்க முடியும். ஐந்து அடி வரைக்கும் நீளமா வளரக் கூடியது. இதுக்கு உணவு இன்னொரு மீன்தான்.

மீனையே மீன் சாப்பிட்டு வளர்றதை விரும்பாதவங்களுக்கு கோல்டன் ஃபிஷ் ஏத்றது. எட்டு கோல்டு ஃபிஷ், ஒரு ப்ளாக் கோல்டு ஃபிஷ் சேர்த்து ஒன்பது மீன்களை ஒரு தொட்டியில் வளர்த்தால், வாஸ்து மீனுக்குரிய பலன் கிடைக்கும்.

# லட்ச ரூபாய்


• அரோனா

# மீன்!

இதுக்குச் சாதாரண இயற்கை மற்றும் செயற்கை உணவுகளே போதும்.

இந்த மீன்களுக்கான பிரத்யேகத் தொட்டிகள் உலகத் தரத்தில் தயாரிக்கப்பட்டு, சீனாவிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. தொட்டியை அலங்கரிக்கும் கண்ணாடிக் கற்கள் மலேஷியாவிலிருந்து வரவழைக்கப்படுகின்றன'' என்ற ரெட்லின்,

"மீனுக்குத் தேவையான ஆக்ஸிஜன் இருபத்து நான்கு மணி நேரமும் போய்க்கிட்டே இருக்கணும். குளோரின், உப்பு இல்லாத தண்ணீரைத்தான் தொட்டிக்குப் பயன்படுத்தணும். தொட்டியைச் சுத்தம் செய்யும்போது தொட்டியிலிருக்கும் தண்ணீரோடு தான் வேறு பாத்திரத்துக்கு மீனை மாற்றிட வேண்டும். ஏ.சி. அறையில் இருக்கும் மீன் தொட்டிக்கு ஹீட்டர் பயன்படுத்தணும். காரணம், மீன் அதிகமான குளிரைத் தாங்காது'' என்றார்.

**- அனு**

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**

• மீன் உணவு...



# 15

## சுவாமி சுத்தானந்தா

'கடவுள் கடவுள்' என்று உதடுகள் இனிக்கச் சொல்கிறோம். செவி இனிக்கக் கேட்கிறோம். கடவுள் என்பவரைக் கண் குளிரப் பார்க்க இயலுமா? இதோ, இப்படியொரு காட்சி - மகாபாரதத்தில்.

விஸ்வரூப தரிசனம் தரும்படி கிருஷ்ணரை கேட்கிறான் அர்ஜுனன். 'எனக்குள், இந்த ஓர் உடலுக்குள் அசையும் மற்றும் அசையாத பிரபஞ்சம் முழுவதையும் பார்..." என்கிறார் கிருஷ்ண பரமாத்மா.

அர்ஜுனன் பார்க்கிறான், தன்னுடைய புறக்கண்களைக் கொண்டு அல்ல; பிரக்ஞையாக. முழுமை என்னும் உடலைக் கொண்ட இன்னொரு கிருஷ்ணரை - அதாவது, கிருஷ்ணரும் அர்ஜுனரும் சேர்ந்த வடிவத்தைக் காண்கிறான். நாம் பிரக்ஞையோடிருந்தால், நம் உடல் முழுமையின் ஒரு பகுதிதான். உடலை வைத்துப் பார்த்தால், உடல் இந்தப் படைப்பில் இருக்கிறது. பிரக்ஞையை வைத்துப் பார்த்தால், படைப்பு நம்முடன் இருக்கிறது. முழுமையானதை ஈஸ்வரன் என்கிறோம். அவர் மட்டுமே இருக்கிறார்.

மாறாக, நம்முள் பிரச்னை வேறுபட்ட தன்மையுடன் தொடர்கிறது. 'நான்தான் உடல், எனக்கு ஒரு தேவை இருக்கிறது. நான் பார்க்க வேண்டும், கேட்க வேண்டும், தொட வேண்டும் நுகர வேண்டும், அனுபவிக்க வேண்டும், மகிழ்ச்சியோடு இருக்க வேண்டும்' என்று 'வேண்டும்'களில் மூழ்கி விடுகிறோம். இந்தத் தேவைகள் தன்னைப் பற்றி அறியாத தனி மனிதனின் தேவைகளாக ஆகிவிடுகின்றன. ஆனால், நாம் யார் என்கிற விழிப்புணர்வோடு இருந்தால், நம்மால் வெற்றிகரமாக வாழ முடியும்.

நமக்குத் தேவை முழுமையான வாழ்வா, அல்லது முழுமையற்ற, நிரந்தரமற்ற, அர்த்தமற்ற வாழ்வா என்பது நம்முடைய விருப்பத்தைப் பொருத்தது. நாம் எத்தகைய தன்மையுடைவராக இருந்தாலும், கடவுள் நம்மை ஒரு போதும் தூக்கியெறிய மாட்டார். அவரால் அப்படிச் செய்ய இயலாது. நாம் தனிமைப் படுத்தப்பட்டு விட்டதாக நாமே எண்ணிக் கொள்கிறோம். நாம் அவருடன் இருந்துகொண்டே அவருடன் விரோ

த்தை வளர்த்துக் கொள்கிறோம். ஆனால், அவர் எல்லோரையும் எப்போதும் நண்பனாகவே நடத்துகிறார்.

கடவுளின் ராஜ்யத்துக்கு எல்லைக் கோடு இல்லை. அவர் மட்டுமே இருக்கிறார். 'நாம்தான் கடவுள்' என்று வேதம் குறிப்பிடுகிறது - 'நான் கடவுள்' என்பதை வேதாந்தம் எப்படிக் கூறமுடியும்? என்றும் ஒரு கேள்வி எழும். 'கடவுள் இங்கே இருக்கிறார். ஆனால் இது மட்டுமே கடவுள் அல்ல' என்பதுதான் அதன் பொருள். கடவுள் எல்லையற்று வியாபித்திருக்கிறார் என்பதுதான் அந்தக் கருத்து. 'இந்தியா இந்த இடத்தில் உள்ளது' என்பதைப் போன்றதுதான்! இந்தியா இங்கு இருக்கிறது. ஆனால் இது மட்டுமே இந்தியா அல்ல என்பதைப் புரிந்து கொள்கிறோம். கடவுள் இங்கே இருக்கிறார், நமக்குள் இருக்கிறார். ஆனால் நாம் மட்டுமே கடவுள் அல்ல.

# நிரந்தரமான ஒரு துணை!

ஒரு குருவுக்கும், அவருடைய சிடருக்கும் இடையே நடந்த விவாதத்தைப் பற்றிய கதையொன்று உண்டு.

ஒரு மாணவன் தன் குருவிடமிருந்து உபநிடதம், பகவத் கீதை போன்றவற்றைக் கற்றுக் கொண்டு வந்தான். குரு, அத்வைதத் தத்துவத்தையும் அதன் பரந்த தன்மையையும் விளக்குகையில், மாணவனின் உள்ளம் அதை மறுதலித்தது. நீக்கமற நிறைந்திருக்கும் கடவுளில் தானும் உண்டு என்பதை மாணவனால் ஏற்க முடியவில்லை. தன்னுடைய குரு கற்பித்த கருத்தால் திருப்தியுறாமல், த்வைத தத்துவத்தைக் கற்கும் நோக்கில், வேறொரு குருவிடம் செல்கிறான். அவரிடம் பத்து ஆண்டுகள் கற்ற பிறகு, 'சர்வமும் கடவுளே' என்கிற தத்துவம் தவறானது என்பதை நிரூபிப்பதற்காக விவாதம் செய்யும் பொருட்டு, முதல் குருவிடம் வருகிறான். தனக்கும் கடவுளுக்கும் இடையில் பிளவு இருப்பது என்பதுதான் உண்மை என்பதை அழுத்தமாகக் கூறி, அவரை ஒப்புக்கொள்ள வைக்க வேண்டுமென்று நினைக்கிறான். தன்னை நோக்கி வரும் மாணவனின் முகத்தில் தெரியும் அகங்காரத்தை குருவினால் தெளிவாகப் புரிந்து கொள்ள முடிகிறது. நெருங்கி வரும் மாணவன் அவருடன் விவாதம் செய்ய விரும்புவதாகக் கூற, குரு, புன்சிரிப்புடன், "மகனே, சற்றுப் பொறுத்திரு" என்று கூறிவிட்டு, சீடன் ஒருவனைக் கூப்பிட்டு, முடிதிருத்துபவரை அழைத்து வரச் சொல்கிறார். முடிதிருத்துபவர் வந்து குருவின் தலையை முழுமையாக மழித்துவிட்டு, தன்னிடமிருந்த கண்ணாடியை குருவிடம் கொடுத்துவிட்டு, தன் பணிக்காக பாராட்டுவார் என்று காத்திருக்கிறார். கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்த குரு, அப்படியே முடி திருத்துபவரின்





# பரிசு ரூ.2000/-

வீரர்கள் மற்ற அணி வீரர்களைப் பார்த்து, உற்சாகத்துடன சொல்லத் தக்க ஒரு வாசகம் (ஸ்லோகன்) எழுதியனுப்புங்க! உங்களோட வாசகம் உலகக் கோப்பையையே கையில

## "இந்தப் படை போதுமா? இன்னும் கொஞ்சம் வேண்டுமா?"

ஒரு நாள் கிரிக்கெட் தொடரில் வெஸ்ட் இண்டீஸை வீழ்த்தி, இந்தியா கோப்பையைக் கைப்பற்றியுள்ளது. இதே உத்வேகத்துடன் உலகக் கோப்பையையும் வெல்வோமென டிராவிட் கூறியுள்ளார். மேலே கண்ட வாசகம் போல் நம் கிடைச்சுட்ட மாதிரி உற்சாகத்தைப் பொங்க வைக்கணும். சிறந்த எட்டு வாசகங்களுக்கு தலா ரூ.250/- பரிசு. **கடைசி தேதி 12.2.2007.** ஆசிரியர் தீர்ப்பே இறுதி. அஞ்சலட்டையின்மீது **'உலகக் கோப்பை ஸ்லோகன்'** என்று குறிப்பிட மறக்காதீர்கள்!

காலில் விழுந்து வணங்குகிறார். "ஓ, நாராயணா, என் முகத்துக்கு எவ்வளவு அழகைக் கொடுத்திருக்கிறீர்கள். பௌர்ணமி நிலவைப்போல என் தலை ஜொலிக்கிறதே!" என்கிறார். அதிர்ந்து போன முடி திருத்துபவர், "ஐயா, என்னைப் போய் எப்படி நீங்கள் நாராயணா என்று சொல்லலாம்? என் காலில் ஏன் விழுகிறீர்கள்?" என்று கேட்கிறார்.

குரு தன்னுடன் வாதாட வந்திருக்கும் பழைய மாணவனைப் பார்க்க, அந்த மாணவனுக்கு விஷயம் புரிகிறது. பத்து வருடங்கள் கடுமையாகப் படித்த பிறகு அவன் புரிந்து கொண்ட 'தான் கடவுள் அல்ல, தான் நாராயணன் அல்ல' என்ற விஷயத்தை, எங்குமே செல்லாமல், எந்தக் கல்வியையும் கற்காமல் அந்த முடிதிருத்துபவர் புரிந்து கொண்டுள்ளார்.

**"கடவுளைத் தவிர யார் நமக்கு நல்ல தோழனாக இருக்க முடியும்?"**

கடவுளை ஓர் இடத்துக்கு மட்டும் சொந்தமானவராக ஆக்கும் இறையியல் விளக்கங்கள் மனித குலத்தைப் பிளவுபடுத்துகின்றன. கடவுள் எல்லாவற்றையும் உள்ளடக்கியவர். அவர் தனிப்பட்டவரல்லர். நம் வாழ்வில் யார் நமக்குச் சிறந்த நண்பராக இருக்க முடியும்? செல்வமோ, வறுமையோ எதுவானாலும் நம்மை விட்டு விலகாதவரே நண்பர். இறப்பு என்பதை எடுத்துக் கொண்டால், இறப்பு - அதாவது காலம், அது மிக நல்ல நண்பன், நம்மை விட்டு விலகுவதேயில்லை. கடவுளைத் தவிர, வேறு யார் எனக்கு நல்ல தோழனாக இருக்க முடியும்? ஆம்; கடவுள்தான். கடவுள் எனக்கு மட்டுமல்ல எல்லோருக்குமே நல்ல தோழன்தான். மற்றவர்களும் நல்ல நண்பர்கள்தான், ஏனெனில் அவர்களும் கடவுளின் பகுதி!

(முற்றும்)



# சென்னையில் அம்மா!

"ஒரு வண்ணான் வளர்த்த கழுதை, தவறி பாழடைந்த கிணற்றுக்குள் விழுந்துவிட்டது. அந்தக் கிணற்றுக் குள்ளே இருந்து கழுதையை மீட்பது சிரமம். சில வேலையாட்களைக் கூப்பிட்டு, 'அந்தக் கழுதையால் இனி பயனில்லை. எனவே, அந்தப் பாழுங்கிணற்றை மண் கொட்டி மூடி விடுங்கள்' என்று சொல்லி விட்டுப் போய்விட்டான் வண்ணான்.

ஒரு மணி நேரம் ஆகி இருக்கும். வண்ணானின் வீட்டுக்கு வெளியில் ஒரே கொண்டாட்டம்; கூச்சல். கிணற்றுக்குள்ளே விழுந்துவிட்ட கழுதை அங்கே ஆட்டம் போட்டுக் கொண்டிருந்தது. வண்ணானுக்கு ஒன்றும் புரியவில்லை. வேலையாளிடம் விசாரித்தான்.

வேலையாள் சொன்னான்: "ஐயா! உங்க கழுதை ரொம்பப் புத்திசாலி. நாங்க கிணற்றுக்குள்ளே மண்ணைத் தள்ளியதும், அந்தக் கழுதை தன் மீது விழுந்த மண்ணையெல்லாம் தன் உடம்பை ஒருமுறை உதறி கீழே தள்ளிவிட்டு, அந்த மண் மீது ஏறி நின்றுகொண்டது. இப்படியே ஒவ்வொரு முறை மண் விழுந்தபோதும், அதற்குள்ளே சிக்கிக் கொள்ளாமல், அந்த மண் மீது ஏறி நின்று கொண்டுவிட்டது. மண்ணால் பாழுங் கிணறு நிரம்பியபோது, வெளியில் துள்ளிக் குதித்து உங்கள் வீட்டுக்கே ஓடி வந்துவிட்டது".

இந்த உலகத்தில் இதுதான் தினமும் நடக்கிறது. பலரும் நம்மைக் கடுமையாக விமர்சனம் செய்வார்கள்; திட்டுவார்கள். ஆனால் நாம் சோர்ந்து போய்விடக் கூடாது. அந்த விமர்சனங்களை உதறிவிட்டு, நிமிர வேண்டும். வாழ்க்கையில் அடுத்த கட்டத்தை அடைய வேண்டும்."

- சென்ற வார தமது சென்ன விஜயத்தின்போது, பச்சையப்பன் கல்லூரி மைதானத்தில் நடந்த வரவேற்பு நிகழ்ச்சியில்தான் இந்தக் கதையை மாதா அமிர்தானந்தமயி சொன்னார்.

இந்நிகழ்வின்போது அம்மா பக்தர்களுடன் சேர்ந்து கொண்டு ஒரு மணி நேரம் பஜன் நடத்தினார். உற்சாகமாகக் கைகளை அசைத்தும், கோலாட்டக் கட்டைகளைத் தட்டியும் குழந்தைபோலப் பாடினார். இரவு பத்து மணிக்கு மேல் பக்தர்கள் தரிசனம் தொடங்கியது. மைதானத்தில் குழுமியிருந்த அத்தனை பக்தர்களையும் ஒவ்வொருவராக அணைத்து, அம்மா ஆசி வழங்கி முடிக்கும்போது நள்ளிரவு தாண்டி மறுநாள் அதிகாலை ஆகிவிட்டது.

- எஸ்.சந்திரமௌலி

நான்கு வாரங்களாக வெளிவந்த வாரம் ஒரு பட்டுப் புடைவை பரிசுப் போட்டியில்,

*போட்டி எண்.1ன் விடை :*
**ஏ.பி.ஜே.அப்துல் கலாம்**

*போட்டி எண் 2ன் விடை :*
**சானியா மிர்சா, ஷேன் வார்ன், கங்குலி, சாந்தி, லாலு, சதாம் உசேன், எல்.கணேசன், மம்தா பானர்ஜி**

*போட்டி எண் 3ன் விடை :*
**பொங்கல் வாழ்த்து**

*போட்டி எண் 4ன் விடை :*
**அன்பே கடவுள்**

வந்து குவிந்த ஆயிரக்கணக்கான கடிதங்களிலிருந்து பரிசுக்குரிய நான்கு பேரைத் தேந்தெடுத்துக் கொடுத்தார் சிறுமி தாரிகா.

சரியான விடை எழுதி, குலுக்கல் முறையில் சென்னை, தி.நகர் ஸ்ரீ பாலம் சில்க் சாரீஸ் வழங்கும் பட்டுப் புடைவையைப் பரிசாகப் பெறும் நான்கு அதிர்ஷ்டசாலிகள்:

*போட்டி 1 :*
**ஆர்.சுசீலா,** T66, வள்ளுவர் தெரு, திருநகர், சென்னை - 83

*போட்டி 2 :*
**கே.எஸ்.கோமதி,** F8, கொனார்க் அபார்ட்மெண்ட்ஸ், முதல் குறுக்குத் தெரு, மஹாராஜ நகர், திருநெல்வேலி

*போட்டி 3 :*
**சாந்தா கோபாலன்,** M104/15, 30வது கிராஸ், பெசன்ட் நகர், சென்னை - 90

*போட்டி 4 :*
**பிரஹதா முத்துராமன்,** 3025, Z ப்ளாக், 3வது தெரு, 13வது மெயின் ரோடு, அண்ணா நகர், சென்னை - 40

படம் : பொன்னாச்சி சுந்தரம்

# பட்டுப்புடைவை அதிர்ஷ்டசாலிகள்!



எக்ஸ்சேஞ்ச் எக்ஸ்சேஞ்ச் எக்ஸ்சேஞ்ச் எக்ஸ்சேஞ்ச் எக்ஸ்சேஞ்ச்

மைலாப்பூர்

# ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ் -ல்

04.02.2007 முதல்

புதிய காஞ்சிபுரம் பட்டுச் சேலைகள்

| | |
|---|---|
| ~~ரூ. 3,500~~ | ரூ.1,750/- |
| ~~ரூ. 5,800~~ | ரூ.2,900/- |
| ~~ரூ. 4,300~~ | ரூ.2,150/- |
| ~~ரூ.14,800~~ | ரூ.7,400/- |

பழைய காஞ்சிபுரம் பட்டுச்சேலைகள் எக்ஸ்சேஞ்ச் செய்யப்படும்.



காஞ்சிபுரம் பட்டுச் சேலைகளுக்கு முகூர்த்தம் மற்றும் திருமண கால சலுகை

# ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ்

எண்.13/7, வடக்கு மாட வீதி, கபாலீஸ்வரர் கோயில் அருகில்,
மயிலாப்பூர், போன் : 044-24933097, 24610444

MASTER & VISA CARDS ACCEPTED

